119 சாரியையின் பெயரும் முறையும் தொகையும்

அவைதாம்,
இன்னே வற்றே அத்தே அம்மே
ஒன்னே ஆனே அக்கே இக்கே
அன்னென் கிளவி உளப்படப் பிறவும்
அன்ன என்ப சாரியை மொழியே. ௧௭

120 இன் சாரியை முதல் திரியுமாறு

அவற்றுள்,
இன்னின் இகரம் ஆவின் இறுதி
முன்னர்க் கெடுதல் உரித்தும் ஆகும். ௧௮

121 இன் சாரியை ஈறு திரியுமாறு

அளவாகு மொழிமுதல் நிலைஇய உயிர்மிசை
னஃகான் றஃகான் ஆகிய நிலைத்தே. ௧௯

122 வற்று முதல் திரியுமாறு

வஃகான் மெய்கெடச் சுட்டுமுதல் ஐம்முன்
அஃகான் நிற்றல் ஆகிய பண்பே. ௨௰

123 நான்கு னகர ஈறும் திரியுமாறு

னஃகான் றஃகான் நான்க னுருபிற்கு. ௨௧

124 பொருட்புணர்ச்சியில் ஆனீறு திரியுமாறு

ஆனின் னகரமும் அதனோ ரற்றே
நாள்முன் வரூஉம் வல்முதற் றொழிற்கே. ௨௨

125 அத்து முதல் திரியுமாறு

அத்தின் அகரம் அகரமுனை இல்லை. ௨௩

126 இக்கு முதல் திரியுமாறு

இக்கின் இகரம் இகரமுனை அற்றே. ௨௪

127 ஐ முதல் திரியுமாறு

ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும். ௨௫

128 அக்கு முதலொழிய ஏனைய கெடுமாறு

அப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கின் இறுதிமெய்ம் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகரம் முற்றத் தோன்றாது. ௨௬

129 அம் ஈறு திரியுமாறு

அம்மின் இறுதி கசதக் காலைத்
தன்மெய் திரிந்து ஙஞந ஆகும். ௨௭

130 இயல்புகணத்துமுன் அம் ஈறு கெடுமாறு

மென்மையும் இடைமையும் வரூஉங் காலை
இன்மை வேண்டும் என்மனார் புலவர். ௨௮

131 ஐந்தாமுருபில் இன் சாரியை முழுதும் கெடுதல்

இன்னென வரூஉம் வேற்றுமை உருபிற்
கின்னென் சாரியை இன்மை வேண்டும். ௨௯

132 புணர்மொழியுள் சாரியை
வருமென்றல்

பெயரும் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை உருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்
ஒட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்
சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்கா
திடைநின் றியலும் சாரியை இயற்கை
உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும். ௩௦

133 அத்து, வற்று என்பவற்றின்
ஒற்றுக்கெடும் பேறும்

அத்தே வற்றே ஆயிரு மொழிமேல்
ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே
அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே. ௩௧

134 எழுத்தின் சாரியைகளின்பெயர்
முதலியன

காரமும் கரமும் கானொடு சிவணி
நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை. ௩௨

135 நெட்டெழுத்துச்சாரியை

அவற்றுள்,
கரமும் கானும் நெட்டெழுத் திலவே. ௩௩

136 குற்றெழுத்துக்குற்ற சாரியை

வரன்முறை மூன்றும் குற்றெழுத் துடைய. ௩௪

137 ஐ, ஔவின் சாரியை

ஐகார ஔகாரம் கானொடும் தோன்றும். ௩௫

138 மெய்யீற்றின்முன் உயிர்புணர்தல்

புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித் தியலாது
மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுத்தே. ௩௬

139 உயிர்பிரிந்த உயிர்மெய்யின்
மெய் இயல்பு

மெய்யுயிர் நீங்கில் தன்னுரு வாகும். ௩௭

140 உயிரீறும் உயிர் முதன்மொழியும்
புணருமிடத் துடம்படுமெய் தோன்றல்

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார். ௩௮

141 எழுத்துக்கள் ஒன்றுபலவாமாறு

எழுத்தோர் அன்ன பொருடெரி புணர்ச்சி
இசையிற் றிரிதல் நிலைஇய பண்பே. ௩௯

142 பொருட்புணர் மொழிகள்

அவைதாம்,
முன்னப் பொருள புணர்ச்சி வாயின்
இன்ன என்னும் எழுத்துக்கடன் இலவே. ௪௰

புணரியல் முற்றிற்று.

ஐந்தாவது

# தொகைமரபு.

—:o:—

143 உயிர் மயங்கியல் மெய்ம்மயங்கியலைப் பற்றிய வருமொழி

கசதப முதலிய மொழிமேற் றோன்றும்
மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்
ஙஞநம வென்னும் ஒற்றா கும்மே
அன்ன மரபின் மொழிவயி னான. க

144 இருபத்துநான்கீற்றின் முன்னர் வருமொழியியல்பாதல்

ஞநம யவவெனும் முதலாகு மொழியும்
உயிர்முத லாகிய மொழியும் உளப்பட
அன்றி யனைத்தும் எல்லா வழியும்
நின்ற சொல்முன் இயல்பா கும்மே. உ

145 மெல்லெழுத்துறழ்ச்சி

அவற்றுள்,
மெல்லெழுத் தியற்கை உறழினும் வரையார்
சொல்லிய தொடர்மொழி இறுதி யான. ௩

146 ணனமுன் யாவும் ஞாவும் புணர்தல்

ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்
வினையோ ரனைய என்மனார் புலவர். ௪

147 அல்வழியில் ணனஈறு இயல்பாதல்

மொழிமுதல் ஆகும் எல்லா எழுத்தும்
வருவழி நின்ற ஆயிரு புள்ளியும்
வேற்றுமை யல்வழித் திரிபிடன் இலவே. ௫

148 வேற்றுமையில் இயல்பாகுமாறு

வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி
மேற்கூ றியற்கை ஆவயி னான. ௬

149 லனமுன் தநக்கள் றனவாதல்

லன என வரூஉம் புள்ளி முன்னர்த்
தந என வரிற் றனவா குமே. ௭

150 ணள டணவாதல்

ணளவென் புள்ளிமுன் டணவெனத் தோன்றும். ௮

151 முன்னிலைவினைச் சொல்
வன்கணத்தாக்கண் முடியுமாறு

உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளி இறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பா குநவும் உறழா குநவுமென்
றாயீ ரியல வல்லெழுத்து வரினே. ௯

152 ஷை சிறப்புவிதி

ஔவென வருஉம் உயிரிறு சொல்லும்
ஞநமவ என்னும் புள்ளி இறுதியும்
குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட
முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே. கO

153 உயர்திணைப்பெயர் நாற்கணத்திற்
புணருமாறு

உயிரீ றாகிய உயர்திணைப் பெயரும்
புள்ளி இறுதி உயர்திணைப் பெயரும்
எல்லா வழியும் இயல்பென மொழிப. கக

154 உயர்திணைப்பெயரின் சிறப்புவிதி

அவற்றுள்,
இகர இறுபெயர் திரிபிடன் உடைத்தே. கஉ

155 விரவுப்பெயருள் இயல்பாவன

அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே. கங

156 உயிரீறுமெய்யீறுகட்கு மூன்றும்
வேற்றுமை முடிபு

புள்ளி இறுதியும் உயிரிறு கிளவியும்
வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையால்

தம்மி னாகிய தொழிற்சொல் முன்வரின்
மெய்ம்மை யாகலும் உறழத் தோன்றலும்
அம்முறை இரண்டும் உரியவை உளவே
வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். கச

157 இரண்டாம்வேற்றுமைத்திரிபுக்கொ[illegible]

மெல்லெழுத்துமிகுவழி வலிப்பொடு தோன்றலும்
வல்லெழுத்து மிகுவழிமெலிப்பொடு தோன்றலும்
இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்
உயிர்மிக வருவழி உயிர்கெட வருதலும்
சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்
சாரியை இயற்கை உறழத் தோன்றலும்
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க் கவ்வியல் நிலையலும்
மெய்பிறி தாகிடத் தியற்கை ஆதலும்
அன்ன பிறவும் தன்னியல் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கும்
ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப. கரு

158 இ ஐ ஈற்றுப்பெயர்க்கு அல்வழிமுடிபு

வேற்றுமை யல்வழி இ ஐ என்னும்
ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைய

அவைதாம்,
இயல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவும்
உறழா குநவும் என்மனார் புலவர். கசு

159 இ, ஐ ஈற்றுஇடைச்சொல்முடிபு

சுட்டுமுத லாகிய இகர இறுதியும்
எகரமுதல் வினாவின் இகர இறுதியும்
சுட்டுச்சினை நீடிய ஐயென் இறுதியும்
யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
வல்லெழுத்து மிகுநவும் உறழா குநவும்
சொல்லியல் மருங்கின் உளவென மொழிப. கஎ

160 மெய்ம்மயங்கியலை நோக்கிய

நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்
குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டலும்
அறியத் தோன்றிய நெறியியல் என்ப. கஅ

161 உருபியலைநோக்கியநிலைமொழிக்கருவி

ஆறன் உருபினும் நான்கன் உருபினும்
கூறிய குற்றொற் றிரட்டல் இல்லை
ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்
நெடுமுதல் குறுகும் மொழிமுன் ஆன. ககூ

162 நும்மென் மொழிச்சிறப்புவிதி

நும்மென் இறுதியும் அந்நிலை திரியாது. ௨௦

163 மெய்ம்மயங்கியலை நோக்கிய

நிலைமொழிச்செய்கை

உகரமொடு புணரும் புள்ளி இறுதி
யகரமும் உயிரும் வருவழி இயற்கை. ௨௧

164 அளவும் நிறையும் எண்ணுமாகிய

பெயர்கள் தம்மிற்புணருமாறு.

உயிரும் புள்ளியும் இறுதி யாகி
அளவும் நிறையும் எண்ணும் சுட்டி
உளவெனப் பட்ட எல்லாச் சொல்லும்
தத்தம் கிளவி தம்மகப் பட்ட
முத்தை வரூஉம் காலம் தோன்றின்
ஒத்த தென்ப ஏயென் சாரியை. ௨௨

165 சிறப்புவிதி

அரையென வரூஉம் பால்வரை கிளவிக்குப்
புரைவ தன்றாற் சாரியை இயற்கை. ௨௩

166 இதுவுமது

குறையென் கிளவி முன்வரு காலை
நிறையத் தோன்றும் வேற்றுமை இயற்கை. ௨௪

167 குற்றியலுகரச்சாரியை

குற்றிய லுகரக் கின்னே சாரியை. ௨௫

168 கலமுன் அத்துச்சாரியை

அத்திடை வரூஉம் கலமென் அளவே. ௨௬

169 பனையும் காவும் இன்சாரியை பெறுதல்

பனையென் அளவும் காவென் நிறையும்
நினையுங் காலை இன்னொடு சிவணும். ௨௭

170 அளவிற்கும் நிறைக்கும் மொழிக்கு
முதலாமெழுத்து இனைத்தென்றல்

அளவிற் கும் நிறையிற் கும் மொழிமுதல் ஆகி
உளவெனப் பட்ட ஒன்பதிற் றெழுத்தே
அவைதாம்,
கசதப என்று நமவ என்று
அகர உகரமோ டவையென மொழிப. ௨௮

171 புறனடை

ஈறியல் மருங்கின் இவையிவற் றியல்பெனக்
கூறிய கிளவிப் பல்லா றெல்லாம்
மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி
ஒத்தவை உரிய புணர்மொழி நிலையே. ௨௯

172 மரூஉச்சொல்முடிபு

பலரறி சொல்முன் யாவர் என்னும்
பெயரிடை வகரம் கெடுதலும் ஏனை

ஒன்றறி சொல்முன் யாதென் வினாவிடை
ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்
மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே. ௩௰

தொகைமரபு முற்றிற்று.

—:o:—

## ஆறாவது
## உருபியல்.

173 அகரமுதலிய ஈற்றுமொழிகள்
இன்பெற்றுருபினோடு புணருமாறு

அஆ உஊ எஔ என்னும்
அப்பா லாறன் நிலைமொழி முன்னர்
வேற்றுமை உருபிற் கின்னே சாரியை. ௧

174 வற்றுச்சாரியை பெற்றுருபோடு
புணருமாறு

பல்லவை நுதலிய அகர இறுபெயர்
வற்றொடு சிவணல் எச்சம் இன்றே. ௨

175 யாவென் வினாவுடன் வற்றுச்சாரியை

யாவென் வினாவும் ஆயியல் திரியாது ௩

176 உகரவீற்றுச் சுட்டுமொழிச் சிறப்பு

சுட்டு முதல் உகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய்யொழித் துகரம் கெடுமே. ௪

177 ஐகாரவீற்றிற்கு முடிபுகூறுமாறு

சுட்டுமுதல் ஆகிய ஐயென் இறுதி
வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே. ௫

178 இதுவுமது

யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
ஆயியல் திரியா தென்மனார் புலவர்
ஆவயின் வகரம் ஐயொடும் கெடுமே. ௬

179 ஈகாரவீறு புணருமாறு

நீயென் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயின் னகரம் ஒற்றா கும்மே. ௭

180 ஓகாரவீறுபுணருமாறு

ஓகார இறுதிக் கொன்னே சாரியை. ௮

181 அகர ஆகாரவீற்றுச்சிறப்புவிதி

அஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்
கத்தொடும் சிவணும் ஏழன் உருபே. ௯

182 ஞகரமெய்யீறு இன்சாரியை
பெறுமெனல்

ஞாவென் புள்ளிக் கின்னே சாரியை. ௰

183 சுட்டுமுதல் வகரவீற்றிற்கு முடிபு
கூறுமாறு

சுட்டுமுதல் வகரம் ஐயும் மெய்யும்
கெட்ட இறுதி இயற்றிரி பின்றே. ௧௧

184 மற்றவகரம் இன்சாரியை பெறுதல்

ஏனை வகரம் இன்னொடு சிவணும். ௧௨

185 மகரவீறு புணருமாறு

மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை. ௧௩

186 மகரவீறு இன்சாரியையும் பெறுமாறு

இன்னிடை வரூஉம் மொழியுமா ருளவே. ௧௪

187 நும்மென் இறுதிச்சிறப்புவிதி

நும்மென் இறுதி இயற்கை ஆகும். ௧௫

188 வேறுவித மகரவீற்றுச்சொற்களுக்கு முடிபு

தாநாம் என்னும் மகர இறுதியும்
யாமென் இறுதியும் அதனோ ரன்ன
ஆஎ ஆகும் யாமென் இறுதி
ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகும். ௧௬

189 எல்லாம் என்னுஞ்சொல்லிறுதி
முடியுமாறு

எல்லாம் என்னும் இறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதி யான. ௭௧

190 மேல சொல் நம்சாரியை பெறுதல்

உயர்திணை யாயின் நம்மிடை வருமே. கஅ

191 மகரவீற்றுயர்திணைப்பெயர்க்குமுடிபு

எல்லா ரும் என்னும் படர்க்கை இறுதியும்
எல்லீ ரும் என்னும் முன்னிலை இறுதியும்
ஒற்றும் உகரமுங் கெடுமென மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி
உம்மை நிலையும் இறுதி யான
தம்மிடை வரூஉம் படர்க்கை மேன
நும்மிடை வரூஉம் முன்னிலை மொழிக்கே. க௯

192 னகரவீற்றுட் சிலவற்றிற்குச்
சிறப்புவிதி

தான்யான் என்னும் ஆயீ ரிறுதியும்
மேன்முப் பெயரொடும் வேறுபா டிலவே. உ0

193 இதுவுமது

அழனே புழனே ஆயிரு மொழிக்கும்
அத்தும் இன்னும் உறழத் தோன்றல்
ஒத்த தென்ப உணரு மோரே. உக

194 எழென் எண்ணுப்பெயர் அன்சாரியை பெறுதல்

அன்னென் சாரியை ஏழன் இறுதி
முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப. ௨.௨

195 குற்றுகர வீற்றிற்கு முடிபு

குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்றும் இன்னென் சாரியை. ௨.௩

196 குற்றுகரங்களிற் சில இனவொற்று மிகப்பெறுதல்

நெட்டெழுத் திம்பர் ஒற்றுமிகத் தோன்றும்
அப்பால் மொழிகள் அல்வழி யான. ௨.௪

197 ௸ இனவொற்று மிகப்பெறுவன இயல்பாகுமெனல்.

அவைதாம்,
இயற்கைய ஆகும் செயற்கைய என்ப. ௨.௫

198 குற்றுகரவீற்று எண்ணுப்பெயர்முடிபு

எண்ணின் இறுதி அன்னொடு சிவணும். ௨.௬

199 ஒன்றுமுதல் எட்டெண்கள் சாரியை பெற்றுத்திரியுமாறு

ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வரூஉம்
எல்லா எண்ணும் சொல்லுங் காலை

ஆனிடை வரினும் மானம் இல்லை.
அஃதென் கிளவி ஆவயின் கெடுமே
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே. உஎ

200 எண்ணுப்பெயரல்லாத
குற்றுகரவீற்றுட்சில முடியுமாறு

யாதென் இறுதியும் சுட்டு முதல் ஆகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
ஆய்தம் கெடுதல் ஆவயி னான. உஅ

201 குற்றுகரவீற்றுட்சில ஏழனுருபோடு
முடியுமாறு

ஏழன் உருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்
சாரியைக் கிளவி இயற்கையும் ஆகும்
ஆவயின் இறுதி மெய்யொடும் கெடுமே. உகூ

202 புறனடை

புள்ளி இறுதியும் உயிரிறு கிளவியும்
சொல்லிய அல்ல ஏனைய எல்லாம்
தேருங் காலை உருபொடு சிவணிச்
சாரியை நிலையும் கடப்பா டிலவே. ௩௰

உருபியல் முற்றிற்று.

ஏழாவது

## உயிர்மயங்கியல்.

203 அகரவீற்றுப்பெயர் அல்வழியில் வன்கணத்துடன் புணருமாறு

அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யல்வழிக் கசதபத் தோன்றின்
தத்தம் ஒத்த ஒற்றிடை மிகுமே. ௧

204 அகரவீற்று வினைச்சொல்லு மிடைச்சொல்லும் புணருமாறு

வினையெஞ்சு கிளவியும் உவமக்கிளவியும்
எனவென் எச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே. ௨

205 சுட்டின்முன்னர் ஞநம மெய்மிகல்

சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்
ஒட்டிய ஒற்றிடை மிகுதல் வேண்டும். ௩

206 இதுவுமது

யவமுன் வரினே வகரம் ஒற்றும். ௪

207 இதுவுமது

உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது. ௫

208 செய்யுளில் சுட்டு நீளுமாறு

நீட வருதல் செய்யுளுள் உரித்தே. ௬

209 சாவவெனெச்சத்திறுதி கெடுமாறு

சாவ என்னும் செயவென் எச்சத்
திறுதி வகரம் கெடுதலும் உரித்தே. ௭

210 அகரவீற்றுப்பெயர்வினை
முதலியவற்றிற்குச் சிறப்புவிதி

அன்ன என்னும் உவமக் கிளவியும்
அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்
செய்ம்மன என்னும் தொழிலிறு சொல்லும்
ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்
செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்
செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்
அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்
பலவற் றிறுதிப் பெயர்க்கொடை உளப்பட
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப. ௮

211 வாழிய என்பது புணருமாறு

வாழிய என்னும் செயவென் கிளவி
இறுதி யகரம் கெடுதலும் உரித்தே. ௯

212 அம்ம என்பதற்கு எய்தாதது
எய்துவித்தல்

உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார். ௧௦

213 பலவற்றிறுதிக்குச் செய்யுண் முடிபு

பலவற் றிறுதி நீடுமொழி உளவே
செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான. கக

214 பலசில என்பவற்றின் திரிபுவிதி

தொடர லிறுதி தம்முன் தாம்வரின்
லகரம் றகரவொற் றாகலும் உரித்தே. க௨

215 பலசில என்பவற்றின் உறழ்ச்சிவிதி

வல்லெழுத் தியற்கை உறழத் தோன்றும். க௩

216 அகரவீற்றிற்கு வேற்றுமைமுடிபு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. க௪

217 அகரவீற்று மாப்பெயர்க்குப்

மாப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே. க௫

218 மகஎன்னும் பெயர்க்குச்சாரியை
இன்எனல்

மகப்பெயர்க் கிளவிக் கின்னே சாரியை. க௬

219 மேலதற்குச்சிறப்புவிதி

அத்தவண் வரினும் வரைநிலை இன்றே. க௭

220 ஈற்று வல்லெழுத்துக்கும் வற்றுக்கும்
சிறப்புவிதி

பலவற் றிறுதி உருபியல் நிலையும். க௮

221 ஆகார ஈற்றுப்பெயர் அல்வழியில் முடியுமாறு

ஆகார இறுதி அகர இயற்றே. ௧௯

222 ஆகார ஈற்று வினைச்சொல் முடிபு

செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர். ௨௰

223 ஆகார ஈற்று அல்வழிக்கண் உம்மைத்தொகை முடிபு

உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி
மெய்ம்மை யாக அகரம் மிகுமே. ௨௧

224 எய்தியதன்மேற் சிறப்புவிதி

ஆவும் மாவும் விளிப்பெயர்க் கிளவியும்
யாவென் வினாவும் பலவற் றிறுதியும்
ஏவல் குறித்த உரையசை மியாவும்
தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவியொ
டன்றி யனைத்தும் இயல்பென மொழிப. ௨௨

225 ஆகார ஈறு வேற்றுமைக்கண் முடியுமாறு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௨௩

226 ஷை சிறப்புவிதி

குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்
அறியத் தோன்றும் அகரக் கிளவி. ௨௪

227 ஆகாரவீற்றுப்பெயர்க்கு ஒருவழி
யெய்தியது விலக்குவது

இராவென் கிளவிக் ககரம் இல்லை. ௨௪

228 நிலாஎனும்சொல் அத்துச்சாரியை
பெறுமெனல்

நிலாவென் கிளவி அத்தொடு சிவணும். ௨௫

229 யாமரம் முதலியன மெல்லெழுத்து
மிகப்பெறுமெனல்

யாமரக் கிளவியும் பிடாவும் தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே. ௨௬

230 மேலவை வல்லெழுத்து மிகப்பெறுவது
மாமெனல்.

வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை. ௨௭

231 மாமரக்கிளவி முதலியமூன்று
வல்லெழுத்துப்பெறுமெனல்

மாமரக் கிளவியும் ஆவும் மாவும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன
அகரம் வல்லெழுத் தவையவண் நிலையா
னகரம் ஒற்றும் ஆவும் மாவும். ௨௮

232 ஆனொற்று அகரத்தோடு நிற்குமெனல்

ஆனொற் றகரமொடு நிலையிடன் உடைத்தே. ௩௦

233 ஆன்முன் பவ்வீ புணருமாறு

ஆன்முன் வரூஉம் ஈகார பகரம்
தான்மிகத் தோன்றிக் குறுகலும் உரித்தே. ௩௧

234 ஆகாரவீற்றுட்சிலவற்றிற்குச்
செய்யுள்முடிபு

குறியதன் இறுதிச் சினைகெட உகரம்
அறிய வருதல் செய்யுளுள் உரித்தே. ௩௨

235 இகரவீற்றுப்பெயர்க்கு
வேற்றுமைமுடிபு

இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே. ௩௩

236 இகரஈற்று இடைச்சொல் முதலிய
முடியுமாறு

இனியணி என்னும் காலையும் இடனும்
வினையெஞ்சு கிளவியும் சுட்டும் அன்ன. ௩௪

237 இன்றியென்னெச்சம் செய்யுளில்
இன்றுஎனல்

இன்றி என்னும் வினையெஞ் சிறுதி
நின்ற இகரம் உகரம் ஆதல்
தொன்றியல் மருங்கிற் செய்யுளுள் உரித்தே. ௩௫

238 இகரஈற்றுச்சுட்டுப்பெயர்
இயல்புகணத்தோடுமுடியுமாறு

சுட்டின் இயற்கை முற்கிளந் தற்றே. ௩௬

239 தூணிமுன் பதக்குவரின் வல்லெழுத்து
மிகுமெனல்

பதக்குமுன் வரினே தூணிக் கிளவி
முதற்கிளந் தெடுத்த வேற்றுமை இயற்றே.

240 நாழிமுன் உரிமொழி புணருமாறு

உரிவரு காலை நாழிக் கிளவி
இறுதி இகரம் மெய்யொடுங் கெடுமே
டகரம் ஒற்றும் ஆவயி னான.

241 பனியென்றகாலமுணர்த்துஞ்சொல்
அத்தும் இன்னும் பெறுமெனல்

பனியென வரூஉம் கால வேற்றுமைக்
கத்தும் இன்னும் சாரியை ஆகும்.

242 வளியென் பூதக்கிளவி அத்தும்
இன்னும் பெறுமெனல்

வளியென வரூஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப.

243 உதிஎனும் மரப்பெயர் மெல்லெழுத்து
மிகப்பெறுமெனல்

உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே.

244 புளிஎன்றமரப்பெயர்க்கு அம் என்
சாரியை வருமெனல்

புளிமரக் கிளவிக் கம்மே சாரியை.

245 சுவைப்புளிப்பெயர்முன்
மெல்லெழுத்து மிகப்பெறுமாறு

எனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே. ௪௩

246 ஷை பெயர் வல்லெழுத்து
மிகப்பெறலுமாமெனல்

வல்லெழுத்து மிகினும் மானம் இல்லை
ஒல்வழி அறிதல் வழக்கத் தான. ௪௪

247 நாட்பெயர்களின்முன் ஆன்சாரியை
வருமென்றல்

நாள்முன் தோன்றும் தொழிநிலைக் கிளவிக்
கானிடை வருதல் ஐயம் இன்றே. ௪௫

248 திங்களையுணர்த்தும் பெயர்முன்

திங்கள் முன்வரின் இக்கே சாரியை. ௪௬

249 ஈகாரவீற்றுப்பெயர் அல்வழியில்
வல்லெழுத்து மிகப்பெறுமெனல்

ஈகார இறுதி ஆகார இயற்றே. ௪௭

250 நீ, மீமுன் வலிஇயல்பாதல்

நீயென் பெயரும் இடக்கர்ப் பெயரும்
மீயென மரீஇய இடம்வரை கிளவியும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும். ௪௮

251 இடப்பொருளுணர்த்தும்
மீ முன் வலிமிகல்

இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்
உடனிலை மொழியும் உளவென மொழிப. ௪௯

252 வேற்றுமையில் ஈகாரவீற்றுப்
பெயர்முன்வலிமிகல்

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௫௰

253 நீயென்பதன் பொருட்புணர்ச்சியில்
வலி இயல்பாதல்

நீயென் ஒருபெயர் உருபியல் நிலையும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை ஆகும். ௫௧

254 அல்வழியில் உகரவீற்றுமுன் வலிமிகல்

உகர இறுதி அகர இயற்றே. ௫௨

255 உகரவீற்றுச்சுட்டுமுன் வலிமிகல்

சுட்டின் முன்னரும் அத்தொழிற் றாகும். ௫௩

256 உகரவீற்றுச்சுட்டுமுன் மென்கணம்
முதலியபுணருமாறு

ஏனவை வரினே மேனிலை இயல. ௫௪

257 சுட்டிறுதிமுன்வலி இயல்பாதல்

சுட்டுமுதல் இறுதி இயல்பா கும்மே. ௫௫

258 உகரவீற்றுச்சுட்டுமுதற்பெயர்க்குச்
செய்யுள்முடிபு

அன்றுவரு காலை ஆவா குதலும்
ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்
செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப. ௫௮

259 மேலது வேற்றுமையில் முடியுமாறு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௫௯

260 எரு, செரு மொழிப்புணர்ச்சி

எருவும் செருவும் அம்மொடு சிவணித்
திரிபிடன் உடைய தெரியுங் காலை
அம்மின் மகரம் செருவயிற் கெடுமே
தம்மொற்று மிகூஉம் வல்லெழுத் தியற்கை. ௬௦

261 ழகரவுகரம் நீண்டுமுடியுமாறு

ழகர உகரம் நீடிடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயி னான. ௬௧

262 ஒடுமரப்பெயர்ப்புணர்ச்சி

ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே. ௬௨

263 சுட்டுப்பெயர்க்கு வல்லெழுத்து
விலக்கிச்சாரியை வகுத்தல்

சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்
ஒற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை. ௬௩

264 ஊகாரவீறு அல்வழிபுணருமாறு

ஊகார இறுதி ஆகார இயற்றே. ௬௨

265 ஊகாரவீற்று வினையெச்சம்
முன்னிலைமொழி முன் வலிமிகல்

வினையெஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்
நினையுங் காலை அவ்வகை வரையார். ௬௩

266 ஊகாரவீறு வேற்றுமையில் முடியுமாறு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௬௪

267 குற்றெழுத்தின் பின் உகரம்
பெறுமாறு.

குற்றெழுத் திம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்
நிற்றல் வேண்டும் உகரக் கிளவி. ௬௫

268 பூவென்பெயர்முன் வலி
மிகுதலுமாமெனல்.

பூவெ னொருபெயர் ஆயியல் பின்றே
ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே. ௬௬

269 ஊவென்மொழினகரச்சாரியைபெறுதல்

ஊவெ னொருபெயர் ஆவொடு சிவணும். ௬௭

270 எய்தியதன்மேற்சிறப்புவிதி

அக்கென் சாரியை பெறுதலும் உரித்தே
தக்கவழி அறிதல் வழக்கத் தான. ௬௮

271 ஆடூஉ, மகடூஉ, இன்சாரியை
பெறுதலுமாமெனல்

ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
இன்னிடை வரினும் மானம் இல்லை. ௬௯

272 எகர ஒகரம் ஈறுமிடமுணர்த்துமாறு

எகர ஒகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய என்மனார் புலவர்
தேற்றமும் சிறப்பும் அல்வழி யான. ௭௦

273 எய்தியதிகந்துபடாமற்காத்து
எய்தாதது எய்துவித்தது

தேற்ற எகரமும் சிறப்பின் ஒவ்வும்
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகா. ௭௧

274 ஏகாரவீறு அல்வழியிற் புணருமாறு

ஏகார இறுதி ஊகார இயற்றே. ௭௨

275 இடைச்சொற்களுக்கெய்தாத
தெய்துவித்தது

மாறுகோள் எச்சமும் வினாவும் எண்ணும்
கூறிய வல்லெழுத் தியற்கை ஆகும். ௭௩

276 ஏகாரவீற்று வேற்றுமை முடிபு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௭௪

277 எய்தியதன் மேற்சிறப்புவிதி

ஏயென் இறுதிக் கெகரம் வருமே. ௭௫

278 சேஎன்மரப்பெயர் மெல்லின
மிகப்பெறல்

சேஎன் மரப்பெயர் ஒடுமர இயற்றே. ௭௬

279 இயைபுவல்லெழுத்து விலக்கி

பெற்றம் ஆயின் முற்ற இன்வேண்டும். ௭௭

280 ஐயீறுவேற்றுமையில் முடியுமாறு

ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே. ௭௮

281 எய்தியதன் மேற்சிறப்புவிதி

சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும். ௭௯

282 எய்தியது விலக்கிப்பிறிது

விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
ஆரும் பெயரும் சேமர இயல. ௮0

283 இயைபுவல்லெழுத்து விலக்கி
அம்முவகுத்தல்

பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மொடு சிவணும்
ஐயென் இறுதி அரைவரைந்து கெடுமே
மெய்யவண் ஒழிய என்மனார் புலவர். ௮௧

284 மேலதற்கோர்சிறப்புவிதி

பனையின் முன்னர் அட்டுவரு காலை
நிலையின் றாகும் ஐயென் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி னான.

285 இதுவுமது

கொடிமுன் வரினே ஐயவண் நிற்பக்
கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி. ௮௩

286 இதுவுமது

திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன. ௮௪

287 இதுவுமது

மழையென் கிளவி வளியியல் நிலையும். ௮௫

288 வேற்றுமைக்கட்செய்யுண்முடிபு

செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயென் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடும் கெடுதல் என்மனார் புலவர்
டகாரம் ணகாரம் ஆதல் வேண்டும். ௮௬

289 ஓகாரவீற் றல்வழிமுடிவு

ஓகார இறுதி ஏகார இயற்றே. ௮௭

290 இடைச்சொன் முடிவும் எய்தாததெய்துவித்தலும்

மாறுகொள் எச்சமும் வினாவும் ஐயமும்
கூறிய வல்லெழுத் தியற்கை யாகும். ௮௮

291 இதுவுமது

ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற் றியற்றே. ௮௯

292 ஒகாரவீற்றுவேற்றுமைமுடிபு

வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே
ஒகரம் வருதல் ஆவயி னான. ௯௰

293 எய்தியதுவிலக்கல்

இல்லொடு கிளப்பின் இயற்கை யாகும். ௯௧

294 பிறிதுவிதிவகுத்தல்

உருபியல் நிலையும் மொழியுமா ருளவே
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும். ௯௨

295 ஔகாரவீறு இருவழியுமுடியுமாறு

ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத்து மிகுதல் வரைநிலை யின்றே
அவ்விரு வீற்றும் உகரம் வருதல்
செவ்வி தென்ப சிறந்திசி னோரே. ௯௩

உயிர்மயங்கியல் முற்றிற்று

## எட்டாவது

# புள்ளிமயங்கியல்

296 இருவழியும் ஞகாரம்புணருமாறு

ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்
அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே
உகரம் வருதல் ஆவயி னான. ௧

297 ஞ, உகரம் பெறுமாறு

ஞநமவ இயையினும் உகரம் நிலையும். ௨

298 ந, உகரம்பெறுமாறு

நகர இறுதியும் அதனோ ரற்றே. ௩

299 ந, வேற்றுமையில் அகரம்பெறுதல்

வேற்றுமைக் குக்கெட அகரம் நிலையும். ௪

300 வெரிநென்சொல்புணருமாறு

வெரிநென் இறுதி முழுதுங் கெடுவழி
வருமிடன் உடைத்தே மெல்லெழுத் தியற்கை. ௫

301 மேலதற்கோர்சிறப்புவிதி

ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே. ௬

302 ணகாரவீறுவேற்றுமையிற்புணருமாறு

ணகார இறுதி வல்லெழுத் தியையின்
டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே. ௭

303 மேலதற்கோர்சிறப்புவிதி

ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை. ௮

304 ஆணென்மரச்சொல் அம் பெறல்

ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே. ௯

305 செய்யுளுட்டிரிபுவிலக்கிச்சாரியைகூறல்

விண்ணென வரூஉம் காயப் பெயர்வயின்
உண்மையும் உரித்தே அத்தென் சாரியை
செய்யுள் மருங்கிற் றொழில்வரு காலை. ௧௦

306 உகரமும்வல்லெழுத்தும்விதித்தல்

தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல. ௧௧

307 எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதிகூறல்

கிளைப்பெயர் எல்லாம் கொளத்திரி பிலவே. ௧௨

308 அல்வழியுள்வேற்றுமைமுடிபுபோல
முடியுமாறு

வேற்றுமை அல்வழி எண்ணென் உணவுப்பெயர்
வேற்றுமை இயற்கை நிலையலும் உரித்தே. ௧௩

309 முரணென்சொல்இருவழியுமுடியுமாறு

முரணென் தொழிற்பெயர் முதலியல் நிலையும். ௧௪

310 மகரவீறுவேற்றுமையிற்புணருமாறு

மகர இறுதி வேற்றுமை ஆயின்
துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே. ௧௫

311 மகரஒற்றின்மேலதகரம்நீளுமாறு

அகர ஆகாரம் வரூஉங் காலை
ஈற்றுமிசை அகரம் நீடலும் உரித்தே. ௧௬

312 எய்தியதன் மேற்சிறப்புவிதி

மெல்லெழுத் துறழும் மொழியுமா ருளவே
செல்வழி அறிதல் வழக்கத் தான. ௧௭

313 இல்லென்மரச்சொல் முடியுமாறு

இல்ல மரப்பெயர் விசைமர இயற்றே. ௧௮

314 மகரத்திற்கெய்தாத தெய்துவித்தல்

அல்வழி எல்லாம் மெல்லெழுத் தாகும். ௧௯

315 அகம்என்னுஞ்சொல்முடியுமாறு

அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே
முதனிலை ஒழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை இன்றே ஆசிரி யற்க
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான. ௨௦

316 இலமென்னுஞ்சொல் புணருமாறு

இலமென் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலும் உரித்தே செய்யு ளான. ௨௧

317 ஆயிரமென்னெண்ணுப்பெயர்
அத்துப்பெறல்

அத்தொடு சிவணும் ஆயிரத் திறுதி
ஒத்த எண்ணு முன்வரு காலை. உஉ

318 அடையடுத்தஆயிரமும்அவ்வாறேமெனல்

அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே. உங

319 எய்தாததெய்துவித்தல்

அளவும் நிறையும் வேற்றுமை இயல. உச

320 உயர்திணைப்பெயராகிய பொருட்
புணர்ச்சிக்கண்முடியுமாறு

படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும்
தொடக்கம் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்
வேற்றுமை யாயின் உருபியல் நிலையும்
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான. உரு

321 மேலவற்றிற்கு அல்வழிமுடிபு

அல்லது கிளப்பின் இயற்கை ஆகும். உசு

322 விரவுப்பெயர்க்கிருவழியுமெய்தாத
தெய்துவித்தல்

அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லாம் எனும்பெயர் உருபியல் நிலையும்
வேற்றுமை யல்வழிச் சாரியை நிலையாது. உஎ

323 எய்தியதன்மேற்சிறப்புவிதி

மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை. உஅ

324 எல்லாமென்பதற்குயர்திணைமுடிபு

உயர்திணை யாயின் உருபியல் நிலையும். உகூ

325 நும்மென்பெயர்புணருமாறு

நும்மென் ஒருபெயர் மெல்லெழுத்து மிகுமே. ௩0

326 நும்மென்பெயர்க்கு அல்வழிமுடிபு

அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக்கெட நின்ற மெய்வயின் ஈவர
இய்யிடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
அப்பால் மொழிவயின் இயற்கை ஆகும். ௩க

327 பிறிதுவிதி வகுத்தல்

தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெய ரியல. ௩உ

328 ஈமுங்கம்மும்புணருமாறு

ஈமும் கம்மும் உருமென் கிளவியும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன. ௩௩

329 ஈமுங்கம்மும் அக்கென்சாரியை
பெறல்

வேற்றுமை யாயின் ஏனை இரண்டும்
தோற்றம் வேண்டும் அக்கென் சாரியை. ௩௪

330 மகரங்குறுகுமிடம்

வகார மிசையும் மகாரங் குறுகும். ௧௩

331 மகரவீற்றுநாட்பெயர்க்கு
வேற்றுமை முடிபு

நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
அத்தும் ஆன்மிசை வரைநிலை யின்றே
ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர். ௧௪

332 ணகரமெய்வேற்றுமையிற்புணருமாறு

ணகார இறுதி வல்லெழுத் தியையின்
றகாரம் ஆகும் வேற்றுமைப் பொருட்கே. ௧௫

333 மன்சின்முதலிய புணருமாறு

மன்னும் சின்னும் ஆனும் ஈனும்
பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர். ௧௬

334 வயின்என் இடைச்சொல்புணருமாறு

சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்
அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப. ௧௭

335 குயினென்சொல்புணருமாறு

குயினென் கிளவி இயற்கை ஆகும். ௧௮

336 எகின்மரச்சொல்அம்முப்பெறல்

எகின்மரம் ஆயின் ஆண்மர இயற்றே. ௧௯

337 எகினென்னுஞ்சொல்புணருமாறு

ஏனை எகினே அகரம் வருமே
வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும். ௪௨

338 கிளைப்பெயர்க்குச்சிறப்புவிதி

கிளைப்பெயர் எல்லாம் கிளைப்பெயர் இயல. ௪௩

339 மீனென் சொற்புணர்ச்சி

மீனென் கிளவி வல்லெழுத் துறழ்வே. ௪௪

340 தேனென் சொல்புணருமாறு

தேனென் கிளவி வல்லெழுத் தியையின்
மேனிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்
ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே
வல்லெழுத்து மிகுவழி இறுதி இல்லை. ௪௫

341 மேலதற்கோர்சிறப்புவிதி

மெல்லெழுத்து மிகினும் மானம் இல்லை. ௪௬

342 இதுவுமது

மெல்லெழுத் தியையின் இறுதியொ டுறழும். ௪௭

343 இறால் என் சொற்புணர்ச்சி

இறாஅல் தோற்றம் இயற்கை ஆகும். ௪௮

344 எய்தியதன்மேற்சிறப்புவிதி

ஒற்றுமிகு தகரமொடு நிற்றலும் உரித்தே. ௪௯

345 மின்முதலியவற்றிற்குச்சிறப்புவிதி

மின்னும் பின்னும் பன்னும் கன்னும்
அந்நாற் சொல்லும் தொழிற்பெயர் இயல. ௫௧

346 கன்எனுஞ்சொல்அகரம்பெறல்

வேற்றுமை யாயின் ஏனை யெகினொடு
தோற்றம் ஒக்கும் கன்னென் கிளவி. ௫௨

347 அஃறிணைவிரவுப்பெயர்க்

செய்தாதசெய்துவித்தல்

இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்
மெய்யொழித் தன்கெடும் அவ்வியற் பெயரே. ௫௩

348 மேலதற்கோர் சிறப்புவிதி

ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு
பெயரொற் றகரம் துவரக் கெடுமே. ௫௪

349 எய்தியதுவிலக்கிப்பிறிது

விதிவருத்தல்

சிறப்பொடு வருவழி இயற்கை ஆகும். ௫௫

350 மேலதற்குமற்றோர்விதி

அப்பெயர் மெய்யொழித் தன்கெடு வழியும்
நிற்றலும் உரித்தே அம்மென் சாரியை
மக்கண் முறைதொகூஉம் மருங்கினான. ௫௬

351 தான் முதற்பெயர்களியல்பாமாறு

தானும் பேனும் கோனும் என்னும்
ஆமுறை இயற்பெயர் திரிபிடன் இலவே. ருசு

352 தான்யான் திரியுமாறு

தான்யான் எனும்பெயர் உருபியல் நிலையும். ருஎ

353 மேலவை அல்வழியில் முடியுமாறு

வேற்றுமை யல்வழிக் குறுகலும் திரிதலும்
தோற்றம் இல்லை என்மனார் புலவர். ருஅ

354 அழனென்சொற்கெய்தாததெய்துவித்தல்

அழனே னிறுதிகெட வல்லெழுத்து மிகுமே. ருகூ

355 முன்றில் என்சொற்புணர்ச்சி

முன்னென் கிளவி முன்னர்த் தோன்றும்
இல்லென் கிளவிமிசை றகரம் ஒற்றல்
தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே. கூ0

356 செய்யுளிற்பொன்னென்சொற்புணர்ச்சி

பொன்னென் கிளவி ஈறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
செய்யுள் மருங்கில் தொடரிய லான. கூக

357 யகரவீற்றிற்கு வேற்றுமைமுடிபு

யகர இறுதி வேற்றுமைப் பொருள்வயின்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே. கூஉ

358 விரவுப்பெயர்க்கெய்தியது விலக்கிப் பிறிதுவிதிவகுத்தல்

தாயென் கிளவி இயற்கை ஆகும். ௬௩

359 மேலதிலெய்தாததெய்துவித்தது

மகன்வினை கிளப்பின் முதனிலை இயற்றே. ௬௪

360 யகரவீற்றுள்மெல்லெழுத்துறழ்ச்சி

மெல்லெழுத் துறழும் மொழியுமா ருளவே. ௬௫

361 யகரவீறு அல்வழியியல்பாமெனல்

அல்வழி எல்லாம் இயல்பென மொழிப. ௬௬

362 ரகாரவீற்றுவேற்றுமைமுடிபு

ரகார இறுதி யகர இயற்றே. ௬௭

363 மேலீற்றிற்கெய்தாததெய்துவித்தது

ஆரும் வெதிரும் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும். ௬௮

364 எய்தியதன்மேற்சிறப்புவிதி

சாரென் கிளவி காழ்வயின் வலிக்கும். ௬௯

365 எய்தியதன் மேற்சிறப்புவிதி

பீரென் கிளவி அம்மொடு சிவணும். ௭௰

366 வேற்றுமைப்புணர்ச்சியில் லகாரவீறு

லகார இறுதி னகார இயற்றே. ௭௧

367 மேலதற்கெய்தாததெய்துவித்தது

மெல்லெழுத் தியையின் னகாரம் ஆகும். எஉ

368 லகரவீற்று அல்வழிமுடிபு

அல்வழி எல்லாம் உறழெண மொழிப. எங

369 லகரமெய்ஆய்தமாகுமாறு

தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே. எச

370 எய்தியதன்மேற்சிறப்புவிதி

நெடியதன் இறுதி இயல்புமா ருளவே. எரு

371 நெல்முதலியவற்றினீறு அல்வழியிலும் றகரமாமெனல்

நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்
அல்லது கிளப்பினும் வேற்றுமை இயல. எசு

372 இன்மைப்பொருள்தரும் இல்லென் சொல்புணருமாறு

இல்லென் கிளவி இன்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலும் ஐயிடை வருதலும்
இயற்கை யாதலும் ஆகாரம் வருதலும்
கொளத்தகு மரபின் ஆகிடன் உடைத்தே. எஎ

373 வல்லென் சொற்புணர்ச்சி

வல்லென் கிளவி தொழிற்பெயர் இயற்றே. எஅ

374 எய்திய ப்
வகுத்தது

நாயும் பலகையும் வரூஉங் காலை
ஆவயின் உகரம் கெடுதலும் உரித்தே
உகரம் கெடுவழி அகரம் நிலையும். ௭௯

375 வேற்றுமையிற் பூல்வேல்அம்முப்
பெறல்

பூல்வேல் என்றா ஆலென் கிளவியொ
டாமுப் பெயர்க்கும் அம்மிடை வருமே. ௮௰

376 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதி
வகுத்தது

தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெய ரியல. ௮௧

377 வெயிலென்சொல்அத்துமின்னும்பெறல்

வெயிலென் கிளவி மழையியல் நிலையும். ௮௨

378 வகரவீறுவேற்றுமையிற்புணருமாறு

சுட்டுமுத லாகிய வகர இறுதி
முற்படக் கிளந்த உருபியல் நிலையும். ௮௩

379 மேலனவற்றிற்கல்வழிமுடிபு

வேற்றுமை யல்வழி ஆய்தம் ஆகும். ௮௪

380 எய்தாததெய்துவித்தது

மெல்லெழுத் தியையின் அவ்வெழுத் தாகும். ௮௫

381 வகாரவீற்றனைக்கணங்களொடு புணருமாறு

ஏனவை புணரின் இயல்பென மொழிப. ௮௬

382 எய்தாததெய்துவித்தது

ஏனை வகரம் தொழிற்பெயர் இயற்றே. ௮௭

383 ழகாரவீற்று வேற்றுமைமுடிபு

ழகார இறுதி ரகார இயற்றே. ௮௮

384 தாழென்சொல் அக்குப்பெறுதல்

தாழென் கிளவி கோலொடு புணரின்
அக்கிடை வருதல் உரித்தும் ஆகும். ௮௯

385 இதுவுமது

தமிழென் கிளவியும் அதனோ ரற்றே. ௯௰

386 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிகூறல்

குமிழென் கிளவி மரப்பெயர் ஆயின்
பீரென் கிளவியொ டோரியற் றாகும். ௯௧

387 எய்தியதன்மேற்சிறப்புவிதி

பாழென் கிளவி மெல்லெழுத் துறழ்வே. ௯௨

388 ஏழென்சொல் அன்பெறல்

ஏழென் கிளவி உருபியல் நிலையும். ௯௩

389 மேலதற்கெய்தாததெய்துவித்தல்

அளவும் நிறையும் எண்ணும் வருவழி
நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலும்
கடிநிலை இன்றே ஆசிரி யற்க. [illegible]

390 மேலதற்கெய்தியதன்மேற்சிறப்புவிதி

பத்தென் கிளவி ஒற்றிடை கெடுவழி
நிற்றல் வேண்டும் ஆய்தப் புள்ளி. [illegible]

391 எய்தியதொருமருங்குமறுத்தது

ஆயிரம் வருவழி உகரம் கெடுமே. [illegible]

392 எய்தியதுமுழுவதூஉம்விலக்கியது

நூறூர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்குக்
கூறிய நெடுமுதல் குறுக்கம் இன்றே. [illegible]

393 இதுவுமது

ஐயம் பல்லென வரூஉம் இறுதி
அல்பெயர் எண்ணினும் ஆயியல் நிலையும். [illegible]

394 இதுவுமது

உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது. [illegible]

395 கீழென்சொல்வேற்றுமையிலுறழுமாறு

கீழென் கிளவி உறழத் தோன்றும். க00

396 ளகாரவீறுவேற்றுமையிற்புணருமாறு

ளகார இறுதி ணகார இயற்றே. [illegible]

397 மேலதற்குமென்கணத்துமுடிபு

மெல்லெழுத் தியையின் ணகார மாகும். ௧௦௨

398 மேலதற்கு அல்வழி முடிபு

அல்வழி எல்லாம் உறழென மொழிப. ௧௦௩

399 மேலதற்கெய்தியது விலக்கிப் பிறிதுவிதி வருத்தது

ஆய்தம் நிலையலும் வரைநிலை யின்றே
தகரம் வரூஉங் காலை யான. ௧௦௪

400 நெடியதனிறுதிளகாரத்துக்கெய்தியது விலக்கிப்பிறிதுவிதி வருத்தது

நெடியதன் இறுதி இயல்பா குநவும்
வேற்றுமை அல்வழி வேற்றுமை நிலையலும்
போற்றல் வேண்டும் மொழியுமா ருளவே. ௧௦௫

401 ளகாரவீற்றுத்தொழிற்பெயர்க்கிருவழியும் எய்தியது விலக்கிப்பிறிதுவிதி வருத்தல்

தொழிற்பெயர் எல்லாம் தொழிற்பெயர் இயல. ௧௦௬

402 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தல்

இருளென் கிளவி வெயிலியல் நிலையும். ௧௦௭

403 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தது

புள்ளும் வள்ளும் தொழிற்பெயர் இயல. ௧௦௮

404 மக்கள்என்னுஞ்சொற்கெய்தியது
விலக்கிப்பிறிதுவிதி வகுத்தது

மக்கள் என்னும் பெயர்ச்சொல் இறுதி
தக்கவழி அறிந்து வலித்தலும் உரித்தே. ௧௦௯

405 சாரியைபெறுவனவற்றிற்குச்சாரியையும்
எழுத்துப்பெறுவனவற்றிற்கெழுத்துங்கொடுத்து
முடிக்குமாறு

உணரக் கூறிய புணரியல் மருங்கில்
கண்டுசெயற் குரியவை கண்ணினர்கொளலே. ௧௧௦

புள்ளிமயங்கியல் முற்றிற்று

ஒன்பதாவது

## குற்றியலுகரப்புணரியல்.

406 குற்றியலுகரத்தினறுவகைத்தொடர்

ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்
ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன். ௧

407 ஈரொற்றுத்தொடரிடைத்தொடராகாதெனல்

அவற்றுள்,
ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொடராகா. உ

408 இருவழியினும் உகரம் அரைமாத்திரையுற்று நிற்குமெனல்

அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா இறுதியும் உகரம் * நிலையும். ௩

409 வன்றொடரில் அரைமாத்திரையினுங் குறுகுமெனல்

வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்
தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே. ௪

410 குற்றியலிகரம்புணர்மொழியகத்து வருமாறு

யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது. ௫

411 நெடிற்றொடர்க்குறுயிர்த்தொடர்க்கும் வேற்றுமைப்பொருட்புணர்ச்சி முடிபு

ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை யாயின் ஒற்றிடை இனமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி. ௬

---

* ம் என்றும் பாடம்

412 எய்தியதொருமருங்குமறுப்பது

ஒற்றிடை இனமிகா மொழியுமா ருளவே
அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே. எ

413 இடைத்தொடர்ஆய்தத்தொடர்க்குமுடிபு

இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்
நடையா இயல என்மனார் புலவர். அ

414 வன்றொடர்மென்றொடர்க்குமுடிபு

வன்றொடர் மொழியும் மென்றொடர் மொழியும்
வந்த வல்லெழுத் தொற்றிடை மிகுமே
மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற் றெல்லாம்
வல்லொற் றிறுதி கிளையொற் றாகும். கூ

415 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிகூறல்

மரப்பெயர்க் கிளவிக் கம்மே சாரியை. க0

416 எய்தியதொருமருங்குமறுப்பது

மெல்லொற்று வலியா மரப்பெயரும் உளவே. கக

417 ஈரெழுத்துமொழிவன்றொடர்மொழிகட்
கெய்தாததெய்துவித்தது

ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரும்
அம்மிடை வரற்கும் உரியவை உளவே
அம்மர பொழுகும் மொழிவயி னான. கஉ

418 மென்றொடர்மொழியுட்சிலவற்றிற்
கெய்தாததெய்துவித்தது

ஒற்றுநிலை திரியா தக்கொடு வரூஉம்
அக்கிளை மொழியும் உளவென மொழிப. ௧௩

419 எண்ணுப்பெயரொடு பொருட்பெயர்
முடியுமாறு

எண்ணுப்பெயர்க் கிளவி உருபியல் நிலையும். ௧௪

420 மென்றொடர்மொழிக்குப்பிறமுடிபு

வண்டும் பெண்டும் இன்றொடு சிவணும். ௧௫

421 எய்தியதன்மேற்சிறப்புவிதி

பெண்டென் கிளவிக் கன்னும் வரையார். ௧௬

422 யாதெனிறுதியும்ஆய்தஇறுதிய
முடியுமாறு

யாதென் இறுதியும் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் உருபியல் நிலையும். ௧௭

423 சுட்டுமுதலுகரத்துக்கல்வழிமுடிபு

முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழி யான. ௧௮

424 பிறகணத்தோடல்வழிமுடிபு

ஏனைமுன் வரினே தானிலை இன்றே. ௧௯

425 ஆறீற்றுக்குற்றுகரத்திற்கல்வழிமுடிபு

அல்லது கிளப்பின் எல்லா மொழியும்
சொல்லிய பண்பின் இயற்கை ஆகும். ௨௦

426 வல்லொற்றுக்கெய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி

வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து
[மிகுமே. ௨௧

427 ஏழனுருபிடைச்சொற்குமுடிபு

சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்
யாவினா முதலிய மென்றொடர் மொழியும்
ஆயியல் திரியா வல்லெழுத் தியற்கை. ௨௨

428 யாவினாமொழியியல்பாதல்

யாவினா மொழியே இயல்பும் ஆகும். ௨௩

429 மேலனவற்றிற்குநிலைமொழிச்செய்கை

அந்நான் மொழியும் தந்நிலை திரியா. ௨௪

430 உண்டென்மொழிக்குவேறுமுடிபு

உண்டென் கிளவி உண்மை செப்பின்
முந்தை இறுதி மெய்யொடுங் கெடுதலும்
மேனிலை ஒற்றே ளகாரம் ஆதலும்
ஆமுறை இரண்டும் உரிமையும் உடைத்தே
வல்லெழுத்து வரூஉங் காலை யான. ௨௫

431 திசைப்பெயர்க்கல்வழிமுடிபு

இருதிசை புணரின் ஏயிடை வருமே. ௨௬

432 திசைப்பெயர்க்கெய்தாதசெய்துவித்தது

திரிபுவேறு கிளப்பின் ஒற்றும் உகரமுங்
கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்
ஒற்றுமெய் திரிந்து னகாரம் ஆகும்
தெற்கொடு புணருங் காலை யான. ௨௭

433 பத்தொடெண்ணுப்பெயர்புணருமாறு

ஒன்று முதலாக எட்டன் இறுதி
எல்லா எண்ணும் பத்தன் முன்வரிற்
குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுமே
முற்ற இன்வருஉம் இரண்டலங் கடையே. ௨௮

434 பத்துமுன்இரண்டுபுணருமாறு

பத்தன் ஒற்றுக்கெட னகாரம் இரட்டல்
ஒத்த தென்ப இரண்டுவரு காலை. ௨௯

435 பத்தின்முன்ஆயிரம்புணருமாறு

ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது. ௩௦

436 நிறைப்பெயரளவுப்பெயர்புணருமாறு

நிறையும் அளவும் வருஉங் காலையும்
குறையா தாகும் இன்னென் சாரியை. ௩௧

437 எண்ணுப்பெயரொடுபத்தென்பெயர்புணர்தல்

ஒன்றுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்
நின்ற பத்தன் ஒற்றுக்கெட ஆய்தம்

வந்திடை நிலையும் இயற்கைத் தென்ப
கூறிய இயற்கை குற்றிய லுகரம்
ஆறன் இறுதி அல்வழி யான. ௩௨

438 எண்ணுப்பெயரின் நிலைமொழிச்செய்கை

முதலீ ரெண்ணினொற்று ரகரம் ஆகும்
உகரம் வருதல் ஆவயி னான. ௩௩

439 இதுவுமது

இடைநிலை ரகரம் இரண்டென் எண்ணிற்கு
நடைமருங் கின்றே பொருள்வயி னான. ௩௪

440 இதுவுமது

மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும். ௩௫

441 இதுவுமது

மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும். ௩௬

442 இதுவுமது

நான்கன் ஒற்றே றகாரம் ஆகும். ௩௭

443 இதுவுமது

ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும். ௩௮

444 இதுவுமது

எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும். ௩௯

445 எய்தாதெய்துவித்தது

ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்
முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்

பஃதென் கிளவி ஆய்தபக ரங்கெட
நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகாரம் ஆகும். ௪௰

446 முதலெண்பானெண்களுடன் அளவுப்
பெயர் நிறைப்பெயர் முடியுமாறு

அளந்தறி கிளவியும் நிறையின் கிளவியும்
கிளந்த இயல தோன்றுங் காலை. ௪௧

447 மேல்மாட்டேற்றோடொவ்வாததற்கு
வேறுமுடிபு

மூன்றன் ஒற்றே வந்த தொக்கும். ௪௨

448 இதுவுமது

ஐந்தன் ஒற்றே மெல்லெழுத் தாகும். ௪௩

449 மூன்றற்கும்ஐந்தற்கும்வருமொழி
வரையறுத்தல்

கசதப முதன்மொழி வரூஉங் காலை. ௪௪

450 வேண்டாதுகூறிவேண்டியதுமுடித்தல்

நமவ என்னும் மூன்றொடு சிவணி
அகரம் வரினும் எட்டன்முன் இயல்பே. ௪௫

451 மேல்மாட்டேற்றோடொவ்வாமுடிபு

ஐந்தும் மூன்றும் நமவரு காலை
வந்த தொக்கும் ஒற்றியல் நிலையே. ௪௬

452 இதுவுமது

மூன்றன் ஒற்றே வகாரம் வருவழித்
தோன்றிய வகரத் துருவா கும்மே. சஎ

453 இதுவுமது

நான்கன் ஒற்றே லகாரம் ஆகும். சஅ

454 இதுவுமது

ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே. சகூ

455 மாட்டேற்றானெய்திய உகரத்திற்குக் கேடுகூறியெய்தியது விலக்கிப்பிறிது விதிகூறல்

முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீடல் ஆவயி னான. ருo

456 இதுவுமது

மூன்றும் நான்கும் ஐந்தென் கிளவியும்
தோன்றிய வகரத் தியற்கை ஆகும். ருக

457 எண்ணுப்பெயர் முதல்நீண்டு முடியுமாறு

மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே
உழக்கென் கிளவி வழக்கத் தான. ருஉ

458 இதுவுமது

ஆறென் கிளவி முதனீ டும்மே. ருங

459 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவகுத்தது

ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது
இன்பெறல் வேண்டும் சாரியை மொழியே. ருச

460 முதலொன்பானுடன் நூறுபுணர்தல்

நூறுமுன் வரினும் கூறிய இயல்பே. ருரு

461 மாட்டேற்றோடொவ்வாததற்கு வேறுமுடிபு

மூன்றன் ஒற்றே நகாரம் ஆகும். ருகா

462 இதுவுமது

நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா. ருஎ

463 இதுவுமது

ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்
நூறென் கிளவி நகார மெய்கெட
ஊஆ ஆகும் இயற்கைத் தென்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகாரம் ஒற்றும். ருஅ

464 முதலொன்பானுடன் ஆயிரம்புணருமாறு

ஆயிரக் கிளவி வரூஉங் காலை
முதலீ ரெண்ணின் உகரம் கெடுமே. ருகூ

465 எய்தியதன்மேற்சிறப்புவிதி

முதனிலை நீடினும் மான மில்லை. ௬0

466 மூன்றெனெண் ஆயிரத்தொடுபுணர்தல்

மூன்றன் ஒற்றே வகாரம் ஆகும். ௬௧

467 நான்கெனெண் ஆயிரத்தொடுபுணர்தல்

நான்கன் ஒற்றே லகாரம் ஆகும். ௬௨

468 ஐந்தெனெண் ஆயிரத்தொடுபுணர்தல்

ஐந்தன் ஒற்றே யகாரம் ஆகும். ௬௩

469 ஆறெனெண் ஆயிரத்தொடுபுணர்தல்

ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும். ௬௪

470 ஒன்பானெண் ஆயிரத்தொடுபுணர்தல்

ஒன்பான் இறுதி உருவுநிலை திரியாது
இன்பெறல் வேண்டும் சாரியை மரபே. ௬௫

471 முதலொன்பான்களொடு நூறாயிரம் முடியுமாறு

நூறா யிரமுன் வருஉங் காலை
நூறன் இயற்கை முதனிலைக் கிளவி. ௬௬

472 நூற்றுடன் முதலொன்பானெண்புணர்தல்

நூறென் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்
கீறுசினை ஒழிய இனவொற்று மிகுமே. ௬௭

473 மேலெண்ணுடன் அடையடுத்த
ஒன்றுமுதல் ஒன்பான்கள்புணருமாறு

அவையூர் பத்தினும் அத்தொழிற் றாகும். சஅ

474 நூறென்பதொடு அளவுப்பெயர்
நிறைப்பெயர் முடியுமாறு

அளவும நிறையும ஆயியல
குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர். சகூ

ஒருபஃதுமுதலியஎண்கள் ஒன்றுமுதல்
ஒன்பான்களுடன் புணருமாறு

ஒன்றுமுத லாகிய பத்தூர் கிளவி
ஒன்றுமுதல் ஒன்பாற் கொற்றிடை மிகுமே
நின்ற ஆய்தம் கெடுதல் வேண்டும். எ0

476 ஒருபஃதுமுதலியவற்றோடாயிரம்
புணர்தல்

ஆயிரம் வரினே இன்னென் சாரியை
ஆவயின் ஒற்றிடை மிகுதல் இல்லை. எக

477 ஒருபஃதுமுதலியவற்றோடளவுப்
பெயர்நிறைப்பெயர்புணருமாறு

அளவும் நிறையும் ஆயியல் திரியா. எஉ

478 முதலொன்பான்களுடன் பொருட்பெயர் புணர்தல்

முதனிலை எண்ணின் முன் வல்லெழுத்து வரினும்
ஞநமத் தோன்றினும் யவவந் தோன்றினும்
முதனிலை இயற்கை என்மனார் புலவர். ௭௩

479 மேலவற்றுடன் உயிர்முதல் மொழியும் யகாரமும் முடியுமாறு

அதனிலை உயிர்க்கும் யாவரு காலை
முதனிலை ஒகரம் ஓவா கும்மே
ரகரத் துகரம் துவரக் கெடுமே. ௭௪

480 இரண்டுமுதலொன்பான்களின் முன் மா புணர்தல்

இரண்டு முதல் ஒன்பான் இறுதி முன்னர்
வழங்கியல் மாவென் கிளவி தோன்றின்
மகர அளவொடு நிகரலும் உரித்தே. ௭௫

481 புள்ளிமயங்கியலுள் ஒழிந்துநின்ற செய்யுள்முடிபு

லனவென வரூஉம் புள்ளி இறுதிமுன்
உம்மும் கெழுவும் உளப்படப் பிறவும்
அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்
செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள்வயி னான. ௭௬

482 எழுத்ததிகாரத்திற்புணர்க்கப்படாத சொற்கள் இவையெனவுணர்த்தல்

உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்
குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்
உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்
செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்யொருங் கியலும் தொழிறொகு மொழியும்
தம்மியல் கிளப்பின் தம்முன் தாம்வரூஉம்
எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்
அன்னவை எல்லாம் மருவின் பாத்திய
புணரியல் நிலையிடை உணரத் தோன்றா. எஎ

483 எழுத்ததிகாரப்புறனடை

கிளந்த அல்ல செய்யுளுட் டிரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர். எஅ

குற்றியலுகரப்புணரியல் முற்றிற்று

## எழுத்ததிகாரம் முற்றும்.

—:o:—

# சொல்லதிகாரம்

## சூத்திரத்தொகைவகை

கிளவியோர் அறுபா னொன்றுவேற் றுமையிற்
கிளரிரு பஃதிரண் டேழைந்

துளமயங் கியலாம் விளியின்மூப் பானேழ்
உயர்பெயர் நாற்பதின் மூன்று

தெளிவினை இயலைம் பானுடன் ஒன்று
செறியிடை யியலினாற் பானெட்

டொளிருரி யியலொன் பதிற்றுப்பத் துடனெட்
டொழிபறு பானின்மே லேழே.



உ

கடவுள் துணை

# சொல்லதிகாரம்

முதலாவது

## ளவியாக்கம்.

484 சொல்லும்பொருளும் வரையறுத்தது
உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்கு * மன் சொல்லே. ௧

485 உயர்திணைமுப்பாற் பகுப்பு
ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே. ௨

486 அஃறிணையிருபாற்பகுப்பு
ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்
றாயிருபாற் சொல் அஃறிணை யவ்வே. ௩

* 'மண' என்று சேனாவரையரும் கல்லாடனாரும் பாடங்கொள்வர்.

487 இஃதுஐயமறுக்கின்றது

பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென அறியுமந் தந்தமக் கிலவே
உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும். ச

488 ஆடூஉஅறிசொல்லுணர்த்துகின்றது

னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல். ரு

489 மகடூஉஅறிசொல்உணர்த்துகின்றது

ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல். சா

490 பலரறிசொல்உணர்த்துகின்றது

ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே. எ

491 அஃறிணைஒன்றறிசொல்

ஒன்றறி கிளவி தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி ஆகும். அ

492 அஃறிணைப்பலவறிசொல்உணர்த்துகின்றது

அஆ வஎன வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே. கூ

493 பாலுணர்த்திய பதினோரெழுத்தும்
வினைக்கண்நின்றுமுணர்த்துமெனல்

இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய
ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்
தோற்றம் தாமே வினையொடு வருமே. க0

494 வழுவற்கஎன்றுகாக்கின்றது

வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே. கக

495 இதுவுமது

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி
ஆண்மை அறிசொற் காகிடன் இன்றே. கஉ

496 இதுவுமது

செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல். கங

497 இதுவழுவமைக்கின்றது

வினாவும் செப்பே வினாவெதிர் வரினே. கச

498 இதுவுமது

செப்பே வழீஇயினும் வரைநிலை இன்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான. கரு

499 செப்பிற்கும்வினாவிற்கும்மரபு

செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக்
கப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே. கசு

500 மரபுவழுவமையுமாறு

தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை இலவே. கஎ

501 செய்யுட்குமரபுவழுவமைதி

இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யுள் ஆறே. கஅ

502 இயற்கைப்பொருட்கண்மரபுவழுவாமை

இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல். கக

503 செயற்கைப்பொருண்மேல்மரபுவழுவாமை

செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல். உ0

504 மேலதற்கோர்புறனடை

ஆக்கம் தானே காரணம் முதற்றே. உக

505 எய்தியதுவிலக்கிற்று

ஆக்கக் கிளவி காரணம் இன்றியும்
போக்கின் றென்ப வழக்கின் உள்ளே. உஉ

506 பாலையந்தோன்றியபொருள்மேற்
சொல் நிகழ்த்துமாறு

பான்மயக் குற்ற ஐயக் கிளவி
தானறி பொருள்வயிற் பன்மை கூறல். உங

507 ஐயப்பொருண்மேற்சொல் நிகழ்த்துமாறு

உரு*வென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற் றும் உரித்தே சுட்டுங் காலை. உச

508 மேலையந்துணிந்தவழி அன்மைத்தன்மை
கூறும் மாபு

தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான. உரு

509 வண்ணச்சினைச்சொற்கண்மாபு

அடைசினை முதலென முறைமூன் றும் மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல். உசு

510 பால்திணைவழுவமைக்கின்றது

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கின் ஆகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல. உஎ

511 இடப்பற்றிநிகழுஞ்சொற்களுக்குப்
பொதுவிதி

செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப. உஅ

* 'உருபென'ப்பாடங்கொள்வர், சேனாவரையர்.

512 சிலவற்றிற்குச்சிறப்பிலக்கணம்

அவற்றுள்,
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயி ரிடத்த. ௨௯

513 இதுவுமது

ஏனை இரண்டும் ஏனை இடத்த. ௩௰

514 அறியாப்பொருண்மேற்சொல்
நிகழ்த்துமாறு

யாதெவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும். ௩௧

515 ஒன்றறிந்தவழியும் வருமென்றயிர்ந்து
காக்கின்றது

அவற்றுள்,
யாதென வரூஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயம் தீர்தற்குத்
தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே. ௩௨

516 வரையறையுடையது தொகைபெறும்
வழிப்படுவதோர்மரபு

இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும். ௩௩

517 நினையாப்பொருட்கண்மரபுநிகழ்த்துமாறு

மன்னாப் பொருளும் அன்ன இயற்றே. ௩௪

518 சொற்பொருகுத்திறுத்தலுஞ்செப்பாமாறு

எப்பொருள் ஆயினும் அல்ல தில்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல். ௩௫

519 புறனடையாயதோர்இறுத்தல்வகைமை

அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல். ௩௬

520 திணைவழுவமையுமாறும்மரபுவழுவமைதியும்

பொருளொடு புணராச் சுட்டுப்பெயர் ஆயினும்
பொருள்வேறு படாஅ தொன்றா கும்மே. ௩௭

521 மரபுவழாநிலை

இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலும் காலம் தோன்றிற்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்
இயற்பெயர் வழிய என்மனார் புலவர். ௩௮

522 செய்யுளிடத்துமரபுவழுவமைத்தவாறு

முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே. ௩௯

523 வழக்கின்கண்மரபுவழாநிலையும்
செய்கையுட்கண்மரபுவழுவமைதியும் உணர்த்தல்

சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும். ௪௰

524 ஒருபொருளை யுணர்த்தும் இருபெயர்
வழுக்காக்கின்றது

சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார். ௪௧

525 ஒருபொருளுணர்த்தும் பலபெயர்

ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே. ௪௨

526 திணைவழுக்காத்தவாறு

தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்
றெண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார். ௪௩

527 பால்வழுக்காத்தவாறு

ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது. ௪௪

528 எண்ணின்கட்டிணைவழுவமைக்கின்றது

வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு
[வரையார். ௪௫

529 மரபுவழுக்காக்கின்றது

வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார். ௪௬

530 இதுவுமது

எண்ணுங் காலும் அதுவதன் மரபே. ௪௭

531 உரிச்சொற்கண்மரபுவழுக்காக்கின்றது

இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா. ௪௮

532 ஒருபெயர்ப்பொதுச்சொல்லை
மரபுவழுக்காக்கின்றது

ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும். ௪௯

533 இருதிணையிருபாற்கும் பொதுவாகிய
பெயர்க்கண்மரபுவழுக்காக்கின்றது.

பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன. ௫0

534 திணைவழுவமையுமாறு

பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யுள் உள்ளே. ௫௧

535 பலபொருளுணர்த்துமொருசொல்

வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொலென்
றாயிரு வகைய பலபொருள் ஒருசொல். ௫௨

536 வினைவேறுபடும் பலபொருளொருசொல்
'பொருடெரிநிலைக்கட்பொதுமைநீங்கித்
தெளியத்தோன்றுமாறு

அவற்றுள்,

வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே. ருங.

537 மரபுவழுக்காத்தவாறு

* ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங் கியலும். ருச

538 மரபுவழுக்காக்கின்றது

குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.

539 திணைவழுக்காக்கின்றது

குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்
றாவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி

இவ்வடியைத்தனிச்சூத்திரமாக்குவர் நச்சினார்க்கினியர்.

முன்னத் தின் உணருங் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும். ௫௬

540 இதுவும்திணைவழுக்காக்கின்றது

காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்
ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வரூஉங் கிளவி எல்லாம்
பால்பிரிந் திசையா உயர்திணை மேன. ௫௭

541 குடிமையாண்மைத்தொடக்கத்துக்குப் புறனடை

நின்றாங் கிசைத்தல் இவணியல் பின்றே. ௫௮

542 காலமுலகத்திற்கோர்புறனடை

இசைத்தலும் உரிய வேறிடத் தான. ௫௯

543 அருத்தாபத்திகூறுகின்றது

எடுத்த மொழியினம் செப்பலும் உரித்தே. ௬0

544 பால்வழுவும்திணைவழுவுமமைத்தவாறு

கண்ணும் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக் கியலும் எழுத்தலங் கடையே. ௬௧

கிளவியாக்கம் முற்றிற்று

## இரண்டாவது

# வேற்றுமையியல்

---

545 வேற்றுமைஇனைத்தென்கின்றது

வேற்றுமை தாமே ஏழென மொழிப. க

546 ஒழிந்தவேற்றுமையும்தொகையும்

விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே. உ

547 வேற்றுமையின்பெயர்முறைமுதலியன

அவைதாம்,
பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி என்னும் ஈற்ற. ௩

548 எழுவாய்வேற்றுமை

அவற்றுள்,
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே. ௪

549 எழுவாய்ஆறுபயனிலையும்பெற்றுவாறு

பொருண்மை சுட்டல் * வியங்கொள வருதல்
வினைநிலை உரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்
றன்றி அனைத்தும் பெயர்ப்பய னிலையே. ௫

---

* 'வியங்கோள்' என்பது சேனா-பாடம்

550 தொகைப்பெயரும்பயனிலைகொள்ளுமாறு

பெயரி னாகிய தொகையுமா ருளவே
அவ்வும் உரிய அப்பா லான. ௬

551 எழுவாய்புலப்பட்டும்புலப்படாதும்

எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப. ௭

552 உருபுநிற்குமிடம்

கூறிய முறையின் உருபுநிலை திரியா
தீறுபெயர்க் காகும் இயற்கைய என்ப. ௮

553 பெயர்க்கோரிலக்கணம்

பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழினிலை ஒட்டும் ஒன்றலங் கடையே. ௯

554 இரண்டாவதுஇப்பொருட்கண்வருமெனல்

இரண்டா குவதே,
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் றோன்றும் அதுவே. ௰

555 அதனைமுடிக்கும்பொருள்வேறுபாடு

காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பிற் புகழிற் பழியின் என்று

பெறலின் இழவிற் காதலின் வெகுளியிற்
செறலின் உவத்தலிற் கற்பின் என்றா
அறுத்தலிற் குறைத்தலிற் றொகுத்தலிற்
[பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்றா
ஆக்கலிற் சார்தலிற் செலவிற் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்றா
அன்ன பிறவும் அம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார். கக

556 மூன்றாவதிப்பொருட்கண்வருமெனல்

மூன்றா குவதே,
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே. கஉ

557 அதனைமுடிக்கவரும்பொருள்வேறுபாடு

அதனின் இயறல் அதற்றகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனின் ஆதல்
அதனிற் கோடல் அதனொடு மயங்கல்
அதனொ டியைந்த ஒருவினைக் கிளவி
அதனொ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனொ டியைந்த ஒப்பல் ஒப்புரை
இன்னான் ஏது ஈங்கென வரூஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார். கங

558 நான்காவது இப்பொருட்கண் வருமெனல்

நான்கா குவதே,
குஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எப்பொரு ளாயினும் கொள்ளும் அதுவே. கச

559 அதனை முடிக்கவரும் பொருள்வேறுபாடு

அதற்குவினை யுடைமையின் அதற்குடம் படுதலின்
அதற்குப்படு பொருளின் அதுவாகு கிளவியின்
அதற்கியாப் புடைமையின் அதற்பொருட் டாதலின்
நட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்
றப்பொருட் கிளவியும் அதன்பால என்மனார். கரு

560 ஐந்தாவது இப்பொருட்கண் வருமெனல்

ஐந்தா குவதே,
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
இதனின் இற்றிது என்னும் அதுவே. கசா

561 அதனை முடிக்கவரும்பொருள்வேறுபாடு

வண்ணம் வடிவே அளவே சுவையே
தண்மை வெம்மை அச்சம் என்று
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை என்று
முதுமை இளமை சிறத்தல் இழித்தல்
புதுமை பழமை ஆக்கம் என்று

இன்மை யுடைமை நாற்றம் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன பிறவும் அதன்பால என்மனூர். கஎ

562 ஆறுவது இப்பொருட்கண்வருமெனல்

ஆறு குவதே,
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினும் இதன திதுவெனும்
அன்ன கிளவிக் கிழமைத் ததுவே. கஅ

563 அதனைமுடிக்கவரும்பொருள்வேறுபாடு

இயற்கையின் உடைமையின் முறைமையிற் [கிழமையிற்
செயற்கையின் முதுமையின் வினையின் என்ற
கருவியிற் றுணையிற் கலத்தின் முதலின்
ஒருவழி யுறுப்பிற் குழூஉவின் என்ற
தெரிந்துமொழிச்செய்தியின் நிலையின் வாழ்ச்சியிற்
றிரிந்து வேறுபடூஉம் பிறவும் அன்ன
கூறிய மருங்கிற் றோன்றுங் கிளவி
ஆறன் பால என்மனூர் புலவர். கக

564 ஏழாவது இப்பொருட்கண்வருமெனல்

ஏழா குவதே,
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் இடத்தின் நிலத்திற் காலத்தின்
அனைவகைக் குறிப்பிற் றோன்றும் அதுவே. உ0

565 ஏழனுருபின் பாகுபாடு

கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்
பின்சார் அயல்புடை தேவகை எனாஅ
முன்னிடை கடைதலை வலமிடம் எனாஅ
அன்ன பிறவும் அதன்பால என்மனார். உக

566 வேற்றுமைதொக்குழி விரிக்குமாறும்
அதற்கினமாகிய அன்மொழிதொக்குழி
விரிக்குமாறும்

வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்து
பல்லாறாகப் பொருள்புணர்ந் திசைக்கும்
எல்லாச் சொல்லும் உரிய என்ப. உஉ

வேற்றுமையியல் முற்றிற்று

---

மூன்றாவது

## வேற்றுமைமயங்கியல்.

---

இரண்டின் பொருளு

567 மேழன்பொருளுமயங்குமாறு

கருமம் அல்லாச் சார்பென் கிளவிக்
குரிமையும் உடைத்தே கண்ணென் வேற்றுமை. க

568 இதுவும்அவ்விரண்டன்மயக்கங்கூறுகி

சினைநிலைக் கிளவிக் கையும் கண்ணும்
வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர். ௨

கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே. ௩

570 உருபுமயக்கமாகவருவன

முதற் சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே. ௪

571 பொருள் மயக்கம்

முதன்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளி தென்ப. ௫

572 முதல்சினைகளையாராய்கின்றது

முதலும் சினையும் பொருள்வேறு படாஅ
நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே. ௬

573 பிறனுடம்பட்டதுதானுடம்படுதல்

பிண்டப் பெயரும் ஆயியல் திரியா
பண்டியல் மருங்கின் மரீஇய மரபே. ௭

574 மூன்றுவதன்கட்சொல்லுதல்வகைமை

ஒருவினை யொடுச்சொல் உயர்பின் வழித்தே. ௮

575 மூன்றாவதற்கும் ஐந்தாவதற்குமேது
ஒத்தகிழமையவெனல்

மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கோ ரனைய என்மனார் புலவர். ௯

576 நோக்கனோக்கத்திற்கு ஏதுவும்செயப்படு
பொருளும் ஒத்தஉரிமையவெனல்

இரண்டன் மருங்கி னோக்க னோக்கம்அவ்
இரண்டன் மருங்கின் ஏதுவும் ஆகும். ௧௦

577 ஆறும்வேற்றுமையுயர்திணைத்தொகை
விரியுமாறு.

அதுவென் வேற்றுமை உயர்திணைத்தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே. ௧௧

578 இரண்டாவதும் மூன்றாவதும்
மயங்குமாறு

தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டும் மூன்றும்
கடிநிலை இலவே பொருள்வயி னான. ௧௨

579 மேலதற்கோர் புறனடை

ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப உணரு மோரே. ௧௩

580 இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு

ஓம்படைக் கிளவிக் கையும் ஆனும்
தாம்பிரி விலவே * தொகவரு காலை. ௧௪

581 ஆறாவதுமேழாவதும்மயங்குமாறு

ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்
கேழும் ஆகும் உறைநிலத் தான. ௧௫

582 நான்காவதன்பொருள் ஆறாவதற்குச் செல்லுமாறு

குத்தொக வரூஉம் கொடையெதிர் கிளவி
அப்பொருள் ஆறற் குரித்து மாகும். ௧௬

583 ஐந்தாவதுமிரண்டாவதுமயங்குமாறு

அச்சக் கிளவிக் கைந்தும் இரண்டும்
எச்சம் இலவே பொருள்வயி னான. ௧௭

584 வேற்றுமைமயக்கத்திற்குப்புறனடை

அன்ன பிறவும் தொன்னெறி பிழையா
துருபினும் பொருளினும் மெய்தடு மாறி
இருவயின் நிலையும் வேற்றுமை எல்லாம்
திரிபிடன் இலவே தெரியு மோர்க்கே. ௧௮

---

* "தொகைவரு" என்பது சேனா-பாடம்

585 பலவுருபு தொடர்ந்தடுக்கியவழிப்படு
மிலக்கணம்

உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
ஒருசொல் நடைய பொருள்செல் மருங்கே. கக

586 உருபு நிற்குமிடங்கூறுவது

இறுதியும் இடையும் எல்லா உருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார் உ௦

587 ஆறனுருபிலக்கணமும் எல்லாவுருபிற்குப்
பொதுஇலக்கணமும்

பிறிதுபிறி தேற்றலும் உருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப. உக

588 எய்தியது விலக்கிற்று

ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ இறுதி யான. உஉ

589 உருபுகள் தம்பொருளவன்றி மயங்குமாறு

யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும். உங

590 வேற்றுமைகள் தம்பொருள்மாறுபட்டுழியும்
அப்பொருள எனல்

எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபிற்
பொருணிலை திரியா வேற்றுமைச் சொல்லே. உச

591 உருபுகளுட்சிலசெய்யுளுட்டிரியுமெனல்

குஐ ஆனென வரூஉம் இறுதி
* அஒடும் சிவணும் செய்யுள் உள்ளே. உரு

592 எய்தியது விலக்கிற்று

அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கிற்
குவ்வும் ஐயும் இல்லென மொழிப. உசு

593 நான்காவது ஏனையுருபுகளின்
பொருள்களோடு மயங்குமாறு

இதனது இதுவிற் றென்னுங் கிளவியும்
அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும்
அதனாற் செயற்படற் கொத்த கிளவியும்
முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பின் ஆக்கமும்
காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழிக் கிளவியும்
அன்ன பிறவும் நான்கன் உருபிற்
றொன்னெறி மரபின தோன்ற லாறே. உஎ

594 மற்றையுருபுகளுந்தம்முள்மயங்குமாறு

ஏனை உருபும் அன்ன மரபின
மான மிலவே சொன்முறை யான. உஅ

* 'அவ்வொடு' என்பது சேனா-பாடம்.

595 வேற்றுமைப்பொருள்கள்தோன்றுமிடம்

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்றா
இன்னதற் கிதுபயன் ஆக என்னும்
அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ
ஆயெட் டென்ப தொழில்முதல் நிலையே. உ௯

596 மேலதற்கோர்புறனடை

அவைதாம்,
வழங்கியல் மருங்கிற் குன்றுவ குன்றும். ௩0

597 குறிப்பாற்பொருளுணர்த்தும்
பெயர்இத்துணையெனல்

முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி. ௩க

598 ஆகுபெயரிலக்கணமிருவகையவெனல்

அவைதாம்,
தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலுங் காலை. ௩௩

599 ஆகுபெயரும்வேற்றுமையேற்குமெனல்

* வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். ௧௩

600 ஆகுபெயர் வேறுபாடு

அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே. ௧௪

601 ஆகுபெயர்க்குப்புறனடை

கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே. ௧௫

வேற்றுமைமயங்கியல்

முற்றிற்று.

---

நான்காவது

## விளிமரபு.

602 விளியதுபொதுவிலக்கணம்

விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய என்ப. ௧

* இச்சூத்திரத்தை 598ம் சூத்திரத்தின் ஈற்றடியாக்கி ஒரு சூத்திரமாகக்கொள்வர், சேனாவரையர்.

603 இஃது அப்பெயர்களைக்கூறுவல்லெனல்

அவ்வே,

வன அறிதற்கு மெய்பெறக் கிளப்ப. உ

604 உயர்திணைப்பெயருள் விளியேற்பவை

அவைதாம்,

இஉ ஐஓ என்னும் இறுதி

அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்

மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே. ௩

605 இகரவீறும்ஐகாரவீறும்விளியேற்குமாறு

அவற்றுள்,

இஈ ஆகும் ஐஆய் ஆகும். ௪

606 ஒழிந்தன விளியேற்குமாறு

ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும், ௫

607 இஃது ஐயமறுக்கின்றது

உகரம் தானே குற்றிய லுகரம். ௬

608 வேண்டாகூறிவேண்டிய முடித்தல்

ஏனை உயிரே உயர்திணை மருங்கிற்

றாம்விளி கொள்ளா என்மனார் புலவர். ௭

609 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தல்

அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய ஆகும் செயற்கைய என்ப. அ

610 எய்தியதன்மேற்சிறப்புவிதி

முறைப்பெயர் மருங்கின் ஐஎன் இறுதி
ஆவொடு வருதற் குரியவும் உளவே. கூ

611 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தது

அண்மைச் சொல்லே இயற்கை ஆகும். க0

612 புள்ளியீற்றுள் விளியேற்பவை

னரலள என்னும் அந்நான் கென்ப
புள்ளி இறுதி விளிகொள் பெயரே. கக

613 வேண்டாகூறி வேண்டியது முடித்தல்

ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா. கஉ

614 னகாரவீறுவிளியேற்குமாறு

அவற்றுள்,
அன்னென் இறுதி ஆவா குமே. கங

615 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவருத்தல்

அண்மைச் சொல்லிற் ககரம் ஆகும். கச

616 ஆனென்பது விளியேற்குமாறு

ஆனென் இறுதி இயற்கை ஆகும். கரு

617 எய்தியது விலக்கிப்பிறிது விதிவகுத்தல்

தொழிலிற் கூறும் ஆனென் இறுதி
ஆயா கும்மே விளிவயி னான. ௧௬

618 இதுவுமது

பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே. ௧௭

619 எய்தாததெய்துவித்தது

அளபெடைப் பெயரே அளபெடை இயல. ௧௮

620 இதுவுமது

முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே. ௧௯

621 னகாரவீற்றுள் விளியேலாதவை

தானென் பெயரும் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி அனைத்தும் விளிகோள் இலவே. ௨௦

622 ரகாரவீறுவிளியேற்குமாறு

ஆரும் அருவும் ஈரொடு சிவணும். ௨௧

623 எய்தியதன்மேற்சிறப்புவிதி

தொழிற்பெய ராயின் ஏகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே. ௨௨

624 இதுவுமது

பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே. ௨௩

625 எய்தாததெய்துவித்தது

அளபெடைப் பெயரே அளபெடை இயல. ௨௪

626 விளியேலாதவை

சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன. ௨௫

627 இதுவுமது

நும்மின் திரிபெயர் வினாவின் பெயரென்
றம்முறை இரண்டும் அவற்றியல் பியலும். ௨௬

628 லகாரளகாரவீறு விளியேற்குமாறு

எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும். ௨௭

629 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவகுத்தது

அயனெடி தாயின் இயற்கை யாகும். ௨௮

630 ளகாரவீற்றிற்கு எய்தியதுவிலக்கிப்
பிறிதுவகுத்தல்

வினையினும் பண்பினும்
நினையத் தோன்றும் ஆளென் இறுதி
ஆயா கும்மே விளிவயி னான. ௨௯

631 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவகுத்தல்

முறைப்பெயர்க் கிளவி முறைப்பெயர் இயல. ௩௰

632 ளகாரவீற்றுள்விளியேலாதவை

சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர். ௩௧

633 எய்தாததெய்துவித்தது

அளபெடைப் பெயரே அளபெடை இயல. ௩௨

634 விரவுப்பெயர் விளியேற்குமாறு

கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலே. ௩௩

635 அஃறிணைப்பெயர் விளியேற்குமாறு

புள்ளியும் உயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉம் காலம் தோன்றில்
தெளிவுடைய ஏகாரம் வரலே. ௩௪

636 ஒழிவகைப்பெயர்க்குமெய்தியதுவிலக்கிப்
பிறிதுவிதி வகுத்தது

உளவெனப் பட்ட எல்லாப் பெயரும்
அளபிறந் தனவே விளிக்குங் காலைச்
சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான. ௩௫

637 அம்மஎன் இடைச்சொல் விளியேற்குமாறு

அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே. ௩௬

638 உயர்திணைப்பெயருள் விளியேலாதவை

தநநு எஎன அவைமுதலாகித்
தன்மை குறித்த னரளவென் இறுதியும்
அன்ன பிறவும் பெயர்நிலை வரினே
இன்மை வேண்டும் விளியொடு கொளலே. ௩௭

விளிமரபு முற்றிற்று

---

ஐந்தாவது

# பெயரியல்.

---

639 நால்வகைச்சொல்லின் பொது இலக்கணம்

எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே. ௧

640 அச்சொற்கள்பொருளுணர்த்துமாறு

பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர். ௨

641 இதுவுமது

தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும்
இருபாற் றென்ப பொருண்மை நிலையே. ௩

642 நால்வகையுட்சிறந்தவற்றின் பெயர்

சொல்லெனப் படுப பெயரே வினையென்
றாயிரண் டென்ப அறிந்திசி னோரே.

643 இஃது இறந்ததுகாத்தது

இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்றும் என்ப. ரு

644 பெயர்ச்சொற்குப்பெயர்முறைதொகை

அவற்றுள்,
பெயரெனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ உருபின தோன்ற லாறே. சு

645 இதுவும்பெயர்க்கண்ணதோரிலக்கணம்

இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்
உரியவை உரிய பெயர்வயி னான. எ

646 உயர்திணைப்பெயர்கள்

அவ்வழி,
அவனிவன் உவனென வரூஉம் பெயரும்
அவளிவள் உவளென வரூஉம் பெயரும்
அவரிவர் உவரென வரூஉம் பெயரும்
யான்யாம் நாமென வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவர் என்னும்
ஆவயின் மூன்றோ டப்பதி னைந்தும்
பாலறி வந்த உயர்திணைப் பெயரே. அ

647 இதுவும் அது

ஆண்மை அடுத்த மகனென் கிளவியும்
பெண்மை அடுத்த மகளென் கிளவியும்
பெண்மை அடுத்த இகர இறுதியும்
நம்மூர்ந்து வரூஉம் இகர ஐகாரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆயிரு கிளவியும்
சுட்டுமுத லாகிய அன்னும் ஆனும்
அவைமுத லாகிய பெண்டென் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன. ௫௰

648 உயர்திணை யொருபாற்பெயர்

எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை அடுத்த மகனென் கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர். ௧)

649 இதுவும் அது

நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே

கூடிவரு வழக்கின் நாடியற் பெயரே
இன்றிவர் என்னும் எண்ணியற் பெயரோ
டன்றி அனைத்தும் அவற்றியல் பினவே. கக

650 உயர்திணைப்பெயர்க்குப்புறனடை

அன்ன பிறவும் உயர்திணை மருங்கிற்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே. கஉ

651 அஃறிணைப்பெயர்

அதுவிது உதுவென வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய ஆய்தப் பெயரும்
அவையிவை உவையென வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய அகரப் பெயரும்
யாதுயா யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றோ டப்பதி னைந்தும்
பாலறி வந்த அஃறிணைப் பெயரே. கங

652 அஃறிணையொருசார்ப்பெயர்கள்

பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்
ஒப்பின் ஆகிய பெயர்நிலை உளப்பட
அப்பால் ஒன்பதும் அவற்றோ ரன்ன. கச

653 அஃறிணையியற்பெயர்

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே. ௧௫

654 அஃறிணைப்பெயர்க்குப்புறனடை

அன்ன பிறவும் அஃறிணை மருங்கிற்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே. ௧௬

655 அஃறிணையியற்பெயர்பாலுணர்த்துமாறு

தெரிநிலை யுடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே. ௧௭

656 விரவுப்பெயர்

இருதிணைச் சொற்குமோ ரன்ன உரிமையிற்
றிரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்தம் மரபின்
வினையோ டல்லது பாறெரி பிலவே. ௧௮

657 விரவுப்பெயர்திணையறியப்படுமாறு

நிகழூஉ நின்ற * பால்வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே
அன்ன மரபின் வினைவயி னான. ௧௯

* 'பலர்வரை' என்பது வேறு-பாடம்

658 விரவுப்பெயர்க்குப்பெயருமுறையுந்
தொகையும்

இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
எல்லாம் நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய அல்ல பிறவும் ஆஅங்
கன்னவை தோன்றின் அவற்றொடுங்
கொளலே. ௨௦

659 தொகுத்தனவற்றைவிரிக்கின்றது

அவற்றுள்,

நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்
நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே
முறைப்பெயர்க் கிளவி இரண்டா குமே
ஏனைப் பெயரே தத்தம் மரபின. ௨௧

660 இயற்பெயரின் பெயருமுறையும்

அவைதாம்,

பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்
பன்மை இயற்பெயர் ஒருமையியற் பெயரென்
றந்நான் கென்ப இயற்பெயர் நிலையே. ௨௨

661 சினைப்பெயரின் பெயருமுறையும்

பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச்சினைப் பெயரென்
றந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே. ௨௩

662 சினைமுதற்பெயரின் பெயருமுறையும்

பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்
றந்நான் கென்ப சினைமுதற் பெயரே. ௨௪

663 முறைப்பெயரின் பெயருமுறையும்

பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப்பெயரென்
றாயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே. ௨௫

664 பெண்மைப்பெயரும்திணைக்குரிமையும்

பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே. ௨௬

665 ஆண்மைப்பெயருந்திணைக்குரிமையும்

ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே. ௨௭

666 பன்மைப்பெயருந்திணைக்குரிமையும்

பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றே பலவே ஒருவர் என்னும்
என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே. ௨௮

667 ஒருமைப்பெயருந்திணைக்குரியவும்

ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே. ௨௯

668 தாமென்பெயர்இருதிணைக்குரித்தாமாறு

தாமென் கிளவி பன்மைக் குரித்தே. ௩௰

669 தானென்பதுஇருதிணைக்குரித்தாமாறு

தானென் கிளவி ஒருமைக் குரித்தே. ௩௧

670 எல்லாமென்பதுதிணைக்குரித்தாமாறு

எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி
பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே. ௩௨

671 எய்தியதொருமருங்குமறுக்கின்றது

தன்னுள் உறுத்த பன்மைக் கல்ல
துயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை. ௩௩

672 நீயிர்நீஎன்பவற்றைத்திணைக்
குரிமைப்படுத்தல்

நீயிர் நீயென வரூஉம் கிளவி
பாறெரி பிலவே உடன்மொழிப் பொருள. ௩௪

673 நீயென்பதுபாற்குரித்தாமாறு

அவற்றுள்,
நீயென் கிளவி ஒருமைக் குரித்தே. ௩௫

674 நீயிரென்பதுபாற்குரித்தாமாறு

ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே. ௩௬

675 உயர்திணையதிகாரத்தின் ஒழிபுகூறல்

ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை. ௧௭

676 ஒருவரென்பதன் முடிபு

தன்மை சுட்டிற் பன்மைக் கேற்கும். ௧௮

677 நீயிர் நீ ஒருவர்என்பவற்றிற்கோர் இலக்கணம்

இன்ன பெயரே இவையெனல் வேண்டின்
முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல். ௧௯

678 உயர்திணையொழிபுகூறல்

மகடூஉ மருங்கிற் பாறிரி கிளவி
மகடூஉ இயற்கை தொழில்வயி னான. ௨௦

679 பெயரீறுசெய்யுளுள்திரியுமெனல்

ஆஓ ஆகும் பெயருமா ருளவே
ஆயிடன் அறிதல் செய்யுள் உள்ளே. ௨௧

680 விரவுப்பெயர்செய்யுளுள்வருமுறைமை

இறைச்சிப் பொருள்வயிற் செய்யுளுட் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கிற் றோன்ற லான. ௨௨

681 எய்தியது விலக்கிற்று

திணையொடு பழகிய பெயரலங் கடையே. ௨௩

பெயரியல் முற்றிற்று

---

## வினையியல்.

682 வினைச்சொற்குப்பொதுவிலக்கணம்

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும். க

683 மூவகைக்காலம்

காலந் தாமே மூன்றென மொழிப. உ

684 காலத்தின்பெயர்முறைதொகை

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்மூக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே. ந

685 வினைச்சொற்களின்பாகுபாடு

குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே. ச

686 உயர்திணை முற்றுவினை

அவைதாம்,
அம் ஆம் எம் ஏம் என்னுங் கிளவியும்
உம்மொடு வரூஉங் கடதற என்னும்

அந்நாற் கிளவியொ டாயெண் கிளவியும்
பன்மை உரைக்குந் தன்மைச் சொல்லே. ௫

687 தனித்தன்மை முற்று

கடதற என்னும்
அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோ
டென்னேன் அல்லென வரூஉம் ஏழும்
தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே. ௬

688 ககரஉகாவீற்றிற்குவேற்றுமைமுடிபு

அவற்றுள்,
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர். ௭

689 படர்க்கையொருமைமுற்று

அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே. ௮

690 படர்க்கைப் பன்மை முற்று

அர் ஆர் பவ்வூ ரகரமொடு நான்கும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே. ௯

691 [illegible]
[illegible]

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப. ௧௦

692 தெரிநிலைவினைகள்உயர்திணைக்
குரியவெனல்

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அந்நா லைந்தும் மூன்றுதலை யிட்ட
முன்னறக் கிளந்த உயர்திணை யவ்வே. கக

693 உளப்பாட்டுத்தன்மைக்குத்திரிபு
அவற்றுள்,

பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
எண்ணியல் மருங்கிற் றிரிபவை யுளவே. கஉ

694 உயர்திணை வினைக்குறிப்பினுள்ஒன்று

யாஅர் என்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே. கங

695 இருபாற்குமூன்றன் மூன்றீறு
செய்யுளொட்டிரியுமாறு

பாலறி மரபின் அம்மூ வீற்றும்
ஆ ஓ ஆகும் செய்யுள் உள்ளே. கச

696 பிரவுவினையும் அம்முடிபுபெறுமெனல்

ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும். கரு

697 உயர்திணை வினைக்குறிப்பு உணர்த்தல்

அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்

ஒப்பி னானும் பண்பி னானுமென்
றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும். கசு

698 இதுவுமது

அன்மையின் இன்மையின் உண்மையின்
வன்மையின்

அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம். கஎ

699 வினைக்குறிப்பிற்குஈறு மாறு

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வருஉங்
காலக் கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே. கஅ

700 அஃறிணைத்தெரிநிலைவினை

அஆ வஎன வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை. கசு

701 ஒருமைவினை

ஒன்றன் படர்க்கை தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும். உ0

702 விரிந்ததுதொகுத்துத்திணைக்குரிமை கூறல்

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே. உக

703 அஃறிணையிருபாற்குமுரியதோர் வினைக்குறிப்பு

அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினாவே. உஉ

704 அஃறிணை வினைக்குறிப்பு

இன்றில வுடைய வென்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும். உ௩

705 அவ்வினைக்குறிப்பிற் கொருமாறு

பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி அஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே. உ௪

706 விரவுவினையுணர்த்துகின்றவற்றின் பெயர் முதலியன

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயெண் கிளவியும்

பிரிவுவேறு படூஉம் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன உரிமைய. உரு

707 முன்னிலையொருமைவினை

அவற்றுள்,
முன்னிலைக் கிளவி,
இஐ ஆயென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவற்கும் ஒன்றற்கும். உசு

708 முன்னிலைப்பன்மைவினை

இர் ஈர் மின்னென வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோர் அனைய என்மனார் புலவர். உஎ

709 முன்னிலையொழிந்தவற்றின் இலக்கணம்

எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே. உஅ

710 எய்தியதுவிலக்கிற்று

அவற்றுள்,
முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்
மன்னா தாகும் வியங்கோட் கிளவி. உகு

711 இதுவுமது

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா. ௩0

712 வினையெச்சவாய்பாடுகள்

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி. ௩௧

713 ஒருசார்வினையெச்சமுணர்த்தல்

பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்
அன்ன மரபிற் காலங் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே. ௩௨

714 முதனின்றமூன்றற்கும்முடிபு

அவற்றுள்,
முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின. ௩௩

715 அம்மூன்றற்கும்முடிபுவேற்றுமை

அம்முக் கிளவியும் சினைவினை தோன்றிற்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோ ரனைய என்மனார் புலவர். ௩௪

716 ஒழிந்தஎச்சங்கட்குமுடிபு

ஏனை எச்சம் வினைமுத லானும்
ஆனவந் தியையும் வினைநிலை யானும்
தாமியல் மருங்கின் முடியும் என்ப, ௩௫

717 அவ்வெச்சங்கள் அடுக்கியவழிப்படுவதோர்
முறைமை

பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே. ௩௬

718 செய்யும்செய்தவென்னும்பெயரெச்சத்துக்குப்
பொருள்முடிபு

நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்குமோ ரன்ன உரிமைய
செய்யும் செய்த என்னும் சொல்லே. ௩௭

719 செய்யுமென்பதற்கோர்முடிபு
வேற்றுமை

அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்றும் உரித்தே. ௩௮

720 இருவகையெச்சத்திற்கும் எதிர்மறைவினையும்
முடிவாமெனல்

பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை
திரியா. ௩௯

721 அவ்வெச்சங்களின் இடைநிகழும்முடிபு

தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார். ௪0

722 செய்யுமென்பதற்குஈறு கெடுமாறு அவற்றுள்,

செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர். ௪௧

723 இறந்தகாலச்சொல் ஏனைக்காலச் சொல்லோடியையுமாறு

செய்தென் எச்சத் திறந்த காலம்
எய்திடன் உடைத்தே வாராக் காலம். ௪௨

724 நிகழ்காலச்சொல் ஏனைக்காலமும் உணர்த்தல்

முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும். ௪௩

725 விரைவின்கண் எதிர்வும் நிகழ்வும் இறப்பொடு மயங்குமெனல்

வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி

இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர். சச

726 மிக்கதொன்றன்கண் இறப்பும் எதிர்வும்
நிகழ்வொடு மயங்குமெனல்

மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே. சரு

727 முற்றுச்சொற்பொருள்தரும்வேறுபாடு

இதுசெயல் வேண்டும் என்னும் கிளவி
இருவயின் நிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும். ச௬

728 வினைச்சொற்பொருள்படும்வேறுபாடு

வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையும்
உடைத்தே. ச௭

729 எதிர்வு இறப்புநிகழ்வுடன்மயங்குமெனல்

வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்
இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை. ச௮

730 வினைச்சொற்கண்மரபுவழுவமைதி

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே. ௪௯

731 ஓர்பொருண்மைகுறியாதுஇறப்புமெதிர்வும் மயங்குமெனல்

இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி. ௫௦

732 நிகழ்வு எனையவற்றோடுமயங்குமெனல்

எனைக் காலமும் மயங்குதல் வரையார். ௫௧

வினையியல் முற்றிற்று

---

ஏழாவது

# இடையியல்.

733 இடைச்சொற்பொது இலக்கணம்

இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே. ௧

734 இடைச்சொற்களின்பாகுபாடு

அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதவுநவும்
வினைசெயல் மருங்கிற் காலமொடு வருநவும்

வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்
றப்பண் பினவே நுவலுங் காலை. ௨

735 இன்னும்அவற்றுக்கோர்பொதுவிதி

அவைதாம்,
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்
தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப. ௩

736 தத்தங்குறிப்பிற்பொருள்செய்வனவற்றுள்
ஒன்றன்பொருட்பாகுபாடு

கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே. ௪

737 இதுவுமது

விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே. ௫

738 இதுவுமது

அச்சம் பயமிலி காலம் பெருமையென்
றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே ௬

739 இதுவுமது

எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்
றப்பால் எட்டே உம்மைச் சொல்லே. ௭

740 இதுவுமது

பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே. ௮

741 பொருள்படுமாறும் அசைநிலையாமாறும்

தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே. ௯

742 பொருள்படுமாறு

வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனவென் கிளவி. ௧௦

743 இதுவுமது

என்றென் கிளவியும் அதனோ ரற்றே. ௧௧

744 தில்லென்பதற்குப் புறனடை

விழைவின் தில்லை தன்னிடத் தியலும். ௧௨

745 ஏகார ஓகாரங்கட்குப்புறனடை

தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப. கங

746 பொருள்படுமாறுமசைநிலையாமாறும்

மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை
அப்பால் இரண்டென மொழிமனார் புலவர். கச

747 பொருள்படுமாறு

எற்றென் கிளவி இறந்த பொருட்டே. கரு

748 இதுவுமது

மற்றைய தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனங்குறித் தன்றே. கசு

749 இதுவுமது

மன்றவென் கிளவி தேற்றம் செய்யும். கஎ

750 இதுவுமது

தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே. கஅ

751 பொருள்படுமாறும் அசைநிலையும்

அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்
றாயிரண் டாகும் இயற்கைத் தென்ப. ககூ

752 பொருள்படுமாறு

கொல்லே ஐயம். உ0

753 இதுவுமது

எல்லே இலக்கம். உக

754 ஆர்என்னும்இடைச்சொல்முடிபு

இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி

பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே. உஉ

755 மேலதற்கோர்புறனடை

அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல். உங

756 இசைநிறையும்அசைநிலையும்

ஏயும் குரையும் இசைநிறை அசைநிலை

ஆயிரண் டாகும் * இயற்கைத் தென்ப. உச

757 அசைநிலைகூறல்

மாவென் கிளவி வியங்கோள் அசைச்சொல். உரு

758 இதுவுமது

மியாயிக மோமதி இகுஞ்சின் என்னும்

ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல். உசா

759 மேலதற்கோர் புறனடை

அவற்றுள்,

இகுமும் சின்னும் ஏனை இடத்தொடுந்

தகுநிலை யுடைய என்மனார் புலவர். உஎ

* "இயற்கைய வென்ப" என்பது சேனா-பாடம்

760 பொருள்படுமாறு

அம்மகேட் பிக்கும். ௨௮

761 இதுவுமது

ஆங்க உரையசை. ௨௯

762 இதுவுமது

ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும். ௩௰

763 அசைநிலைகூறல்

யாகா,
பிறபிறக் கரோபோ மாதென வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி. ௩௧

764 சார்ந்தசொற்பொருளையுணர்த்தும்

ஆக ஆகல் என்ப தென்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை. ௩௨

765 பொருள்வேறுபாடு

ஈரள பிசைக்கும் இறுதியில் உயிரே
ஆயியல் நிலையுங் காலத் தானும்
அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வரு * காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும். ௩௩

* 'தான்வருங்' என்பது வேறுபாடம்

766 இதுவுமது

நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும். ௩௪

767 முற்கூறிய உம்மைகள்மயங்குமெனல்

எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே. ௩௫

768 எச்சஉம்மைக்கட்சொல்லுதல்வகைமை

எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல். ௩௬

769 முற்றும்மைஎச்சப்பொருட்டுமென
வழுவமைத்தல்

முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும். ௩௭

770 ஈற்றசைஏகாரத்திற்கு வேறோர்இலக்கணம்

ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி
கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே. ௩௮

771 எண்களுக்கு முடிபுவேற்றுமை

உம்மை எண்ணும் எனவென் எண்ணும்
தம்வயிற் றொகுதி கடப்பா டிலவே. ௩௯

772 எண்ணிடத்துவழுவமைக்கின்றது

எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித் தியலும் என்மனார் புலவர். சு0

773 எண்ணும்மைபிறவெண்ணொடுமயங்கல்

உம்மை தொக்க எனாவென் கிளவியும்
ஆவீ றாகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன. சக

774 எண்ணிடைச்சொற்றொகுப்புவேற்றுமை

அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குறி மரபிற் செவ்வெண் இறுதியும்
ஏயி னாகிய எண்ணின் இறுதியும்
ஆவயின் வரினும் தொகையின் றியலா. சஉ

775 உருபுதொகையெனப்படுமென
வழுவமைத்தது

உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார். சங

776 உம்மென்னிடைச்சொல்திரியுமெனல்

உம்முந் தாகும் இடனுமா ருண்டே. சச

777 எண்ணிடைச்சொற்கள் வினைச்சொற்
கண்ணும் வருமெனல்

வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே. சரு

778 எண்ணிடைச்சொற்கள் பிரிந்து

என்றும் எனவும் ஒடுவும் தோன்றி
ஒன்றுவழி யுடைய எண்ணினுட் பிரிந்தே. சு௬

779 எழுவகையிடைச்சொற்கும் பொருட்புறனடை

அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல வாயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே. சஎ

780 அவற்றிற்குச்சொற்புறனடை

கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே. சஅ

இடையியல் முற்றிற்று.

எட்டாவது

# உரியியல்.

—:0:—

781 உரிச்சொற்கெல்லாம்பொதுஇலக்கணம்

உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி

ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வே றுகிளத்தல். ௧

782 உரிச்சொற்களுள்யான்கூறப்படுவன
இவையெனல்

வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன. ௨

783 குறிப்புப்பற்றிவருமுரிச்சொற்
பொருட்பாகுபாடு

அவைதாம்,
உறுதவ நனியென வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப. ௩

784 இதுவுமது

உருவுட் காகும் புரையுயர் * வாகும். ௪

785 இது பண்பு

குருவும் கெழுவும் நிறனா கும்மே. ௫

786 இது குறிப்பு

செல்லல் இன்னல் இன்னா மையே. ௬

* 'பாகும்' என்பது சேனா-பாடம்.

787 இதுவுமது

மல்லல் வளனே * ஏபெற் றாகும். எ

788 இதுவுமது

உகப்பே உயர்தல் உவப்பே உவகை. அ

789 இதுவுமது

பயப்பே பயனாம். கூ

790 இது பண்பு

பசப்பு நிறனாகும். க0

791 இது குறிப்பு

இயைபே புணர்ச்சி. கக

792 இசைகூறுகின்றது

இசைப்பிசை யாகும். கஉ

793 இது குறிப்பு

அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி. கங

794 இதுவுமது

மழவுங் குழவும் இளமைப் பொருள க௪

795 இதுவுமது

சீர்த்தி மிகுபுகழ் * மாலை இயல்பே. கரு

* 'ஏபெற் றாகும்' என்பதைத் தனிச்சூத்திரமாக்கியுரையிடுவர், சேனாவரையர்.

* 'மாலை இயல்பே' என்பதைத் தனிச்சூத்திரமாக்கியுரையிடுவர் சேனாவரையர்.

796 இதுவுமது

கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும். கசு

797 இதுவுமது

கதழ்வும் ‡ துனையும் விரைவின் பொருள. கஎ

798 இதுவுமது

அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும். கஅ

799 இது பண்பு

வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
§ நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள. க௯

800 இதுகுறிப்பு

தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட் டாகும். உ0

801 இதுவுமது

கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு. உக

802 இதுபண்பு

தடவும் கயவும் நளியும் பெருமை. உஉ

803 எய்தியதன்மேற்சிறப்புவிதி

அவற்றுள்,
தடவென் கிளவி கோட்டமும் செய்யும். உ௩

---

‡ 'துனைவும்' என்பது சேனா-பாடம்.

§ 'நேர்வும்' என்பது சேனா-பாடம்

804 இதுவுமது
கயவென் கிளவி மென்மையும் * செய்யும். ௨௪

805 இதுவுமது
நளியென் கிளவி செறிவும் ஆகும். ௨௫

806 இது குறிப்பு
பழுது பயமின்றே. ௨௬

807 இது பண்பு
சாயல் மென்மை. ௨௭

808 இது குறிப்பு
முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே. ௨௮

809 இதுவுமது
வம்பு நிலையின்மை. ௨௯

810 இதுவுமது
மாதர் காதல். ௩௰

811 இதுவுமது
நம்பும் மேவும் நசையா கும்மே. ௩௧

812 இதுவுமது
ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம். ௩௨

813 இதுவுமது
புலம்பே தனிமை. ௩௩

* 'ஆகும்' என்பது வேறு பாடம்.

814 இதுவுமது
துவன்று நிறைவாகும். ௬௪

815 இதுவுமது
முரஞ்சல் முதிர்வே. ௬௫

816 இது பண்பு
வெம்மை வேண்டல். ௬௬

817 இதுகுறிப்பு
பொற்பே பொலிவு. ௬௭

818 இதுவுமது
வறிது சிறிதாகும். ௬௮

819 இதுவுமது
ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும். ௬௯

820 குறிப்பும் பண்புமுணர்த்துகின்றது
பிணையும் பேணும் பெட்பின் பொருள. ௭0

821 இதுகுறிப்பு
பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும். ௭௧

822 இதுவுமது
படரே உள்ளல் செலவும் ஆகும். ௭௨

823 இதுவுமது
பையுளும் சிறுமையும் நோயின் பொருள. ௭௩

824 இதுவுமது
எய்யா மையே அறியா மையே. ௭௪

825 இருவுமது
நன்றுபெரி தாகும். சரு

826 இருவுமது
தாவே வலியும் வருத்தமும் ஆகும். சசு

827 இருவுமது
தெவுக்கொளற் பொருட்டே. சஎ

828 இருவுமது
தெவ்வுப்பகை யாகும். சஅ

829 இருவுமது
விறப்பும் உறப்பும் வெறிப்பும் செறிவே. சகூ

830 எய்தியதன்மேற்சிறப்புவிதி
அவற்றுள்,
விறப்பே வெரூஉம் பொருட்டும் ஆகும். ருo

831 இஃது இசை
கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள. ருக

832 எய்தியதன்மேற்சிறப்புவிதி
அவற்றுள்,
அழுங்கல் இரக்கமுங் கேடும் ஆகும். ருஉ

833 இதுகுறிப்பு
கழுமென் கிளவி மயக்கம் செய்யும். ருங

834 இதுவுமது

செழுமை வளனும் கொழுப்பும் ஆகும். ௫௪

835 இதுவுமது

விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும். ௫௫

836 இதுவுமது

கருவி தொகுதி.

837 இதுவுமது

கமம்நிறைந் தியலும். ௫௭

838 இதுவுமது

அரியே ஐம்மை. ௫௮

839 இதுவுமது

கவவகத் திடுமே. ௫௯

840 இஃதுஇசை

துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர். ௬௰

841 எய்தியதன் மேற்சிறப்புவிதி

அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும். ௬௧

842 இதுவுமது

இலம்பா டொற்கம் ஆயிரண்டும் வறுமை. ௬௨

843 இதுவுமது

ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள. ௬௩

844 இதுவுமது
கவர்வு விருப்பாகும். ௬௪

845 இதுவுமது
சேரே திரட்சி. ௬௫

846 இதுவுமது
வியலென் கிளவி அகலப் பொருட்டே. ௬௬

847 இதுவுமது
பேநாம் உருமென வரூஉம் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள. ௬௭

848 இதுவுமது
வயவலி யாகும். ௬௮

849 இது பண்பு
வாளொளி யாகும். ௬௯

850 இது குறிப்பு
* துய்யென் கிளவி அறிவின் திரிபே. ௭௦

851 இதுவுமது
உயாவே உயங்கல். ௭௧

852 இதுவுமது
உசாவே சூழ்ச்சி. ௭௨

* 'துய்யென்' என்பது சேனா-பாடம்.

853 இதுவுமது

வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம். ௭௩

854 இதுவுமது

கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள. ௭௪

855 எய்தியதன்மேற்சிறப்புவிதி

நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப. ௭௫

856 இதுவுமது

நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை. ௭௬

857 இதுகுறிப்பு

புனிறென் கிளவி ஈன்றணிமைப் பொருட்டே. ௭௭

858 இதுவுமது

நனவே களனும் அகலமும் செய்யும். ௭௮

859 இதுவுமது

மதவே மடனும் வலியும் ஆகும். ௭௯

860 எய்தியதன்மேற்சிறப்புவிதி

மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே. ௮௰

861 இதுவுமது

புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி. ௮௧

862 இதுவுமது

அமர்தல் மேவல். ௮௨

863 இதுவுமது

யாணுக் * கவினாகும். அஉ

864 இதுவுமது

பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள. அச

865 பெரும்பான்மைகுறிப்பும் சிறுபான்மை பண்பும்

கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்றேற் றாயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே. அரு

866 எய்தியதன்மேற்சிறப்புவிதி

ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே. அசா

867 இதுவுமது

ஐ வியப் பாகும். அஎ

868 இதுவுமது

‡ முனைவு முனிவா கும். அஅ

869 இதுவுமது

வையே கூர்மை. அகூ

---

* 'கவினும்' என்பது சேனா-பாடம்

‡ 'முனை' என்றபாடமுங்காட்டுவர், நச்சினார்க்கினியர்

870 இதுவுமது

எறுழ் வலியாகும். ௯0

871 உரிச்சொற்கெல்லாம் புறனடை

மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபிற் றோன்றுமன் பொருளே. ௯௧

872 இதுவுமது

* கூறிய கிளவி பொருணிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே. ௯௨

873 நால்வகைச்சொல்லையுமுணருமாறும் உணர்த்துமாறும் அவற்றின் தன்மையும் உணர்த்தல்

பொருட்குப்பொருள் தெரியின் அதுவரம் பின்றே. ௯௩

874 இதுகுறிப்பு

பொருட்குத்திரி பில்லை உணர்த்த வல்லின். ௯௪

875 இதுவுமது

உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே. ௯௫

* இச்சூத்திரத்தில் 'கிளவிப்பொருணிலை' 'அவற்றொடுங்' என்று பாடங் கொள்வர் சேனாவரையர்.

876 சொற்பொருளுணர்த்துங்காரணம்
ஆசிரியர்க்கேபுலப்படுமெனல்

மொழிப்பொருட் காரணம்விழிப்பத் தோன்றா. ௯௬

877 உரிச்சொற்குஎழுத்துப்பிரிந்திசைத்தலின்

எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல்பின்றே. ௯௭

878 உரிச்சொற்கெல்லாம்புறனடை

அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வருஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை ஆணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர். ௯௮

உரியியல் முற்றிற்று

—:0:—

ஒன்பதாவது

## எச்சவியல்.

879 செய்யுட்செய்தற்குரியசொற்கள்
வரையறை

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே. ௧

880 இயற்சொற்கிலக்கணம்

அவற்றுள்,
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே ௨.

881 திரிசொற்கிலக்கணம்

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி. ௩.

882 திசைச்சொற்கிலக்கணம்

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி. ௪

883 வடசொற்கிலக்கணம்

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே. (௫)

884 இதுவுமது

சிதைந்தன வரினும் இயைந்தன வரையார். ௬

885 செய்யுள்விகாரமாமாறு

அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை
வலிக்கும் வழி வலித்தலும் மெலிக்கும்வழி
மெலித்தலும்

விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர். எ

886 செய்யுள்செய்வழி அதன் பொருட்கிடை

நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே. அ

887 நிரனிறைகூறுகின்றது

அவற்றுள்,
நிரனிறை தானே,
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல். ௯

888 சுண்ணமாமாறு

சுண்ணம் தானே,
பட்டாங் கமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல். ௧0

889 அடிமறியாமாறு

அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே. ௧௧

890 மேலதற்கோர்புறனடை

பொருடெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயிற் றிரியும்
தோற்றமும் வரையார் அடிமறி யான. ௧௨

891 மொழிமாற்றுமாறு

மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல். கங

892 இருபொருள் படுவன இவையெனல்

குநறுள எனும் அவைமுத லாகிய
கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா. கச

893 தொகைச்சொற்போலடுக்கிவருவன

இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்
றவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே. கரு

894 தொகைச்சொற்குப்பெயருமுறையுந்
தொகையும்

வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்
றவ்வா றென்ப தொகைமொழி நிலையே. கசா

895 வேற்றுமைத்தொகை

அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயலே. கஎ

896 உவமத்தொகை

உவமத் தொகையே உவம இயலே. கஅ

897 வினைத்தொகை

வினையின் தொகுதி காலத் தியலும். க௯

898 பண்புத்தொகை

வண்ணத்தின் வடிவின் அளவிற் சுவையினென்
றன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்ன திதுவென வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே. உ०

899 உம்மைத்தொகை

இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரொ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே. உக

900 அன்மொழித்தொகை

பண்பு தொகவரூஉங் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே. உஉ

901 தொகைச்சொற்பொருணிலை

அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்

அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருணிலை மரபே. ௨௩.

902 தொகைச்சொல்ஒருசொல்லாய்
நிற்றல்

எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய. ௨௪

903 உம்மைத்தொகைக்குவழுவமைக்கின்றது

உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர். ௨௫

904 தொகையதிகாரம்விட்டு மரபுவழூஉக்
காக்கின்றது

வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன என்னும் குறிப்புரை ஆகும். ௨௬

905 இசைநிறையடுக்கிற்குவரையறை

* இசைப்படு பொருளே நான்குவரம் பாகும். ௨௭

906 பொருளொடுபுணர்தலடுக்கிற்கு
வரையறை

விரைசொல் அடுக்கே மூன்றுவரம் பாகும். ௨௮

---

* 'இசைபடு' என்பது, சேனா-பாடம்

907 வினைச்சொற்களுள் ஒருசாரன
அசையாமாறு

கண்டீர் என்றா கேட்டீர் என்றா
சென்ற தென்றா போயிற் றென்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி அசைக்குங் கிளவி என்ப. ௨௯

908 இதுவுமது

கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்னுறக் கிளந்த இயல்பா கும்மே. ௩௰

909 வினைச்சொற்களுள்ஒருசாரனவற்றிற்கு
ஓர் குறியிடுதல்கூறுகின்றது

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் * என்ற
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினும்
மெய்ம்மை யானும் ஈரிரண் டாகும்
அவ்வா றென்ப முற்றியல் மொழியே. ௩௧

* 'என்றச்' என்பது சேனா-பாடம்

910 மேலதற்கோர்புறனடை

எவ்வயின் வினையும் * அவ்வயின் நிலையும். ௩௨

911 முற்றுச்சொற்குமுடிபு

அவைதாம்,
தத்தங் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர் முடி பினவே. ௩௩

912 எச்சச்சொற்களின் பெயர்முறை தொகை

பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி. ௩௪

913 பிரிநிலையெச்சத்திற்குமுடிபு

அவற்றுள்,
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின. ௩௫

914 வினையெச்சத்திற்குமுடிபு

வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே. ௩௬

* 'அவ்வியல்' என்பது சேனா—பாடம்.

915 பெயரெச்சத்திற்குமுடிபு

பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே. ௩எ

916 ஒழியிசையெச்சத்திற்குமுடிபு

ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின. ௩அ

917 எதிர்மறையெச்சத்திற்குமுடிபு

எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின. ௩௯

918 உம்மையெச்சத்திற்குமுடிபு

உம்மை எச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபா கும்மே. ௪0

919 அவ்வெச்சவும்மையதுகாலமயக்கம்

தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான. ௪௧

920 எனவெனெச்சமாமாறு

எனவென் எச்சம் வினையொடு முடிமே. ௪௨

921 வினையெச்சங்கட்குமுடிபுவேற்றுமை

எஞ்சிய மூன்றும் மேல்வந் து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப. ௪௩

922 குறிப்பெச்சமும் இசையெச்சமும்
முடியுமாறு

* தத்தங் குறிப்பின் எச்சஞ் செப்பும். ௪௪

923 சொல்லெச்சத்திற்குமுடிபு

சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்
சொல்லள வல்ல தெஞ்சுதல் இன்றே. ௪௫

924 மரபுவழுக்காக்கின்றது

அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல். ௪௬

925 மேலதற்கோர்புறனடை

மறைக்குங் காலை மரீஇய தொராஅல். ௪௭

926 ஈ, தா, கொடுவெனும்பலசொற்கு
மரபுவேறுபாடு

ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய. ௪௮

927 ஈயென்பதன்மரபு

அவற்றுள்,
ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே. ௪௯

928 தாவென்பதன்மரபு

தாவென் கிளவி ஒப்போன் கூற்றே. ௫0

---

* இச்சூத்திரத்தின் முதலில் 'அவைதாம்' என்ற சொற் சீரடியைக் கொண்டுரைப்பர் சேனாவரையர்.

929 கொடுவென்பதன்மரபு

கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே. ௫௧

930 கொடுவென்பதற்கு இடவழு
அமைக்கின்றது

கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்
றன்னிடத் தியலும் என்மனார் புலவர். ௫௨

931 இதுவும்ஒருசார்வழுவமைக்கின்றது

பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்துங் கடப்பா டிலவே. ௫௩

932 ஒசைவேறுபாட்டான் ஒருசொல்
ஒருசொல்லாமென்கிறது.

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே. ௫௪

933 பொருளிடைச்சொற்களுட்சில
நிலைவேறுபாடு

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே. ௫௫

934 புதியசொற்களுங்கொள்கவெனல்

கடிசொல் இல்லைக் காலத்துப் படினே. ௫௬

935 செய்யுள் விகாரம்

குறைச்சொற் கிளவி குறைக்கும் வழி அறிதல். ௫௭

936 மேலதற்கோர் புறனடை

குறைத்தன வாயினும் நிறைப்பெயர் இயல. ௫௮

937 விசேடிக்குஞ்சொல் இவ்வாறு நிற்குமெனல்

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே. ௫௯

938 உரிச்சொற்றும் விசேடித்தலுண்டெனல்

உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய. ௬௦

939 வினையெச்சமுதலியனவேறுபெயர் பெறுமெனல்

வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய. ௬௧

940 தொடர்மொழிப்பொருள்வேறுபாடு

உரையிடத் தியலும் உடனிலை அறிதல். ௬௨

941 வினைக்குறிப்புச்சொல்பொருள்தரும் வேறுபாடு

முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான. ௬௩

942 ஒருசொல் இருபொருளுணர்த்துவதோர்
மரபுவழுவமைக்கின்றது

ஒருபொருள் இருசொற் பிரிவில வரையார். கூ௪

943 பால்வழு அமைக்கின்றது

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமா ருண்டே. கூ௫

944 ஆற்றுப்படையில் முன்னிலையொருமை
பன்மையொடு முடிகவெனல்

முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே
ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும். கூ௬

945 அதிகாரப்புறனடை

செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியின் நூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல். கூ௭

எச்சவியல் முற்றிற்று.

சொல்லதிகாரச் சூத்திரங்கள் 462

முற்றிற்று.

உ

# பொருளதிகாரம்

## சூத்திரத்தொகைவகை.

ஈட்டும் அகத்திணையும் ஏய்ந்த புறத்திணையும்
காட்டு களவியலும் கற்பியலும்—ஈட்டும்
பொருளியல்மெய்ப் பாடுவமம் போற்றிய செய்யுள்
மரபியலும் ஆம்பொருளின் வைப்பு.

பூமலர்மென் கூந்தால்! பொருளியலிற் சூத்திரங்கள்
ஆவவறு நூற்றறுபத் தைந்தாகும்—மூவகையால்
ஆயிரத்தின் மேலும் அறுநூற் றொருபதென்ப
பாயிரத்தொல் காப்பியங்கற் பார்.

—:0:—

உ

மூன்றாவது

# பொருளதிகாரம்.

முதலாவது

## அகத்திணையியல்.

---

946 எழுவகைத்திணை

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப. ௧

947 எழுவகையுள் தமக்கென நிலம் பெறுவனவும் பெறாதனவுங்கூறுதல்

அவற்றுள்,
நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே. ௨

948 பாடலுட்பயின்றஎழுவகைப்பொருள்

முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை. ௩

949 முதற்பொருளின்னதெனல்

முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே. ௪

950 நால்வகை நிலம்

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே. ௫

951 முல்லைக்குங்குறிஞ்சிக்கும்பொழுது கூறல்

காரும் மாலையும் முல்லை குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர். ௬

952 எய்தியதன்மேற்சிறப்புவிதி

பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப. ௭

953 சிறுபொழுதேபெறுவன கூறல்

* வைகுறு விடியல் மருதம் எற்பாடு
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும். ௮

954 நானிலத்துக்கும்பாலைக்குங்காலங்கூறல்

நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே. ௯

955 எய்தியதன்மேற்சிறப்புவிதி

பின்பனி தானும் உரித்தென மொழிப. ௧௦

* 'வைகறை' எனவும் பாடம்

956 பாலைப்பகுதியுமுரிய பின்பனியும்

இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும்
உரிய தாகும் என்மனார் புலவர். கக

957 மேலனவற்றிற்குப்புறனடை

திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே
நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே. கஉ

958 எய்தாததெய்துவித்தது

உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே கங

959 உரிப்பொருள் கூறல்

புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே. கச

960 பாலைக்கட்குறிஞ்சியுநெய்தலுமயங்கல்

கொண்டுதலைக் கழியினும் பிரிந்தவண் இரங்கினும்
உண்டென மொழிப ஓரிடத் தான. கரு

961 பாலைக்கட்குறிஞ்சிமயங்குதல்

கலந்த பொழுதும் காட்சியும் அன்ன. கசா

962 முதற்பொருளிருவகைத்தெனல்

முதலெனப் படுவ தாயிரு வகைத்தே. கஎ

963 கருப்பொருளிவையெனல்

தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப. ௧௮

964 கருப்பொருட்குப்புறனடை

எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும். ௧௯

965 திணைநிலைப்பெயரினிருவகை

பெயரும் வினையுமென் றாயிரு வகைய
திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே. ௨௦

966 முல்லைக்குங்குறிஞ்சிக்குந் தலைமக்கள்

ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே. ௨௧

967 பாலைநெய்தற்றலைமக்கள்

ஏனோர் பாங்கினும் என்னுங் காலை
ஆறு வகைய திணைநிலைப் பெயரே. ௨௨

968 கைக்கிளை, பெருந்திணைக்கண்
தலைமக்களாவார்

அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர். ௨௩

1219 காமக்குறிப்பாகாதன கூறல்

நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்பொ டொப்புமை
என்றிவை இன்மை என்மனார் புலவர். உசு

1220 மேற்கூறியமெய்ப்பாட்டிற்குப்புறனடை

கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங்
குரைத்தே. உஎ

மெய்ப்பாட்டியல் முற்றிற்று

---

ஏழாவது

## உவமவியல்.

1221 உவமத்தின்பொதுவிலக்கணமும்
பெயராதியவும்

வினைபயன் மெய்யுரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம். ௧

1222 எய்தியதிகந்துபடாமற்காத்தது

விரவியும் வரூஉம் மரபின என்ப. ௨

1223 எய்தாததெய்துவித்தது

உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை. ௩

1224 இதுவுமது

சிறப்பே நலனே காதல் வலியோ
டந்நாற் பண்பும் நிலைக்களம் என்ப. ௪

1225 மேற்கூறியநிலைக்களத்துக்குப்புறனடை

கிழக்கிடு பொருளோ டைந்தும் ஆகும். ௫

1226 உவமை, முதல்சினைபற்றிவருங்கா
லின்னவாறுமெனல்

முதலும் சினையுமென் றாயிரு பொருட்கு
நுதலிய மரபின் உரியவை உரிய. ௬

1227 எய்தாததெய்துவித்தது

சுட்டிக் கூறா உவம மாயிற்
பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன
கொளலே. ௭

1228 இதுவுமது

உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும். ௮

1229 உவமைவிகற்பம்

பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பினஃ துவமம் ஆகும். ௯

1230 உவமத்திற்காவதோரிலக்கணம்

பெருமையும் சிறுமையும் சிறப்பிற் றீராக்
குறிப்பின் வரூஉம் நெறிப்பா டுடைய. கO

1231 உவமவுருபுமொழிகள்

அவைதாம்,
அன்ன ஏய்ப்ப உறழ ஒப்ப
என்ன மான என்றவை எனாஅ
ஒன்ற ஒடுங்க ஒட்ட ஆங்க
வென்ற இயப்ப என்றவை எனாஅ
எள்ள விழைய இறப்ப நிகர்ப்பக்
கள்ளக் கடுப்ப ஆங்கவை எனாஅக்
காய்ப்ப மதிப்பத் தகைய மருள
மாற்ற மறுப்ப ஆங்கவை எனாஅப்
புல்லப் பொருவப் பொற்பப் போல
வெல்ல வீழ ஆங்கவை எனாஅ
நாட நளிய நடுங்க நந்த
ஓடப் புரைய என்றவை எனாஅ
ஆறு றவையும் அன்ன பிறவும்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே. கக

1232 வினையுவமவாய்பாடு

அன்ன ஆங்க மான இறப்ப
என்ன உறழத் தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பால் உவமம். கஉ

1233 எய்தியதிகந்துபடாமற்காத்தது

அன்னவென் கிளவி பிறவொடும் சிவணும். க௩

1234 பயனிலையுவம வாய்பாடு

எள்ள விழையப் புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல வீழ
என்றாங் கெட்டே பயனிலை உவமம். க௪

1235 மெய்யுவம வாய்பாடு

கடுப்ப ஏய்ப்ப மருளப் புரைய
ஒட்ட ஒடுங்க ஓட நிகர்ப்பவென்
றப்பால் எட்டே மெய்ப்பால் உவமம். க௫

1236 உருவுவம வாய்பாடு

போல மறுப்ப ஒப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தவென்
றொத்துவரு கிளவி உருவின் உவமம். க௬

1237 மேல்நாலுவமவாய்பாட்டிற்குப்புறனடை

தத்தம் மரபிற் றோன்றுமன் பொருளே. க௭

1238 இதுவும்மேலனவற்றையேயடக்கின்றது

நாலிரண் டாகும் பாலுமா ருண்டே. க௮

1239 உவமைவேறுவகையான் எட்டாமாறு

பெருமையும் சிறுமையும் மெய்ப்பா டெட்டன்
வழிமருங் கறியத் தோன்றும் என்ப. க௯

1240 எய்தாததெய்துவித்தது

உவமப் பொருளின் உற்ற துணரும்
தெளிமருங் குளவே திறத்திய லான. ௨௦

1241 மேலதற்கோர்புறனடை

உவமப் பொருளை உணருங் காலை
மரீஇய மரபின் வழக்கொடு படுமே. ௨௧

1242 எய்தாததெய்துவித்தது

இரட்டைக் கிளவி இரட்டை வழித்தே. ௨௨

1243 உள்ளுறையுவமம்உணர்த்தல்

பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்னை மரபிற் கூறுங் காலைத்
துணிவொடு வருஉம்துணிவினோர்கொளினே. ௨௩

1244 உள்ளுறையின்ஐவகை

உவமப் போலி ஐந்தென மொழிப. ௨௪

1245 மேலைந்துமிவையெனல்

தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வருஉம் திறத்தியல் என்ப. ௨௫

1246 உள்ளுறையுவமத்திற்கோரிலக்கணம்

கிழவி சொல்லின் அவளறி கிளவி
தோழிக் காயின் நிலம்பெயர்ந் துரையாது. ௨௬

1247 இதுவுமது

கிழவோற் காயின் உரனொடு கிளக்கும்
ஏனோர்க் கெல்லாம் இடம்வரை வின்றே. ௨௭

1248 மேலதற்கேயாவதோர்வேறுபாடு

இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
உவம மருங்கிற் றோன்றும் என்ப. ௨௮

1249 உள்ளுறையுவமையைவரையறுத்தது

கிழவோட் குவமம் ஈரிடத் துரித்தே. ௨௯

1250 தலைமகற்கிடவரையறையில்லையெனல்

கிழவோற் காயின் இடம்வரை வின்றே. ௩௦

1251 தோழியுஞ்செவிலியும்உள்ளுறையுவமம் கூறுமிடமுணர்த்தல்

தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற் குரியர் கொள்வழி யான. ௩௧

1252 எய்தாததெய்துவித்தது

வேறுபட வந்த உவமத் தோற்றம்
கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல். ௩௨

1253 ஏனையுவமத்திற்கோரிலக்கணம்

ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே. ௩௩

1254 எய்தாததெய்துவித்தது

உவமத் தன்மையும் உரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான. ௩௪

1255 உவமத்திற்கேயாவதோரிலக்கணம்

தடுமா றுவமம் கடிவரை யின்றே. ௩௫

1256 எய்தியதுமறுத்தது

அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே. ௩௬

1257 எய்தாதனவரையறையுடைமையிற்கூறிய
வற்றோடினமாகலினுவமத்திற்காவதுணர்த்தல்

நிரனிறுத் தமைத்த நிரனிறை சுண்ணம்
வரைநிலை வைத்த மூன்றலங் கடையே. ௩௭

உவமவியல் முற்றிற்று

---

எட்டாவது

## செய்யுளியல்.

1258 செய்யுட்குறுப்பாவனவற்றின்பெயர்
முதலியன.

மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப் பெனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளபியல் எனாஅத்
திணையே கைகோள் கூற்றுவகை எனாஅக்
கேட்போர் களனே காலவகை எனாஅப்
பயனே மெய்ப்பா டெச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ

மாட்டே வண்ணமொ டியாப்பியல் வகையின்
ஆறு தலையிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே. க

1259 மாத்திரையும்எழுத்தியலுமுணர்த்தல்

அவற்றுள்,
மாத்திரை அளவும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர். உ

1260 அசைவகையுணர்த்தல்

குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே. ௩

1261 சொல்லாதஅசைக்கூறுமுறைத்தல்

இருவகை உகரமொ டியைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப. ௪

1262 எய்தியதுமறுத்தலும் எய்தாததெய்து
வித்தலும்

குறிலிணை உகரம் அல்வழி யான. ௫

1263 அசைநான்கின்வகைக்கெய்தாத
தெய்துவித்தது

இயலசை முதலிரண் * டேனைய உரியசை. ௬

1264 எய்தியதுவிலக்கிப்பிறிதுவிதிவகுத்தல்

தனிக்குறில் முதலசை மொழிசிதைத் தாகாது. ௭

1265 எய்தாததெய்துவித்தையமறுத்தல்

ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம். ௮

1266 இதுவும்ஐயமறுத்தது

முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ
நிற்றல் இன்றே ஈற்றடி மருங்கினும். ௯

1267 எய்தாததெய்துவித்தது

குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
‡ ஒற்றொடுந் தோன்றி நிற்கவும் பெறுமே. ௰

1268 மேலவற்றுக்கும்பின்னவற்றுக்கும்
புறனடை

அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே. ௧௧

---

* 'டேனை உரியசை' என்று பாடங்காட்டுவர் இவ்வியற் பதிப்பாளராகிய சேதுசமஸ்தான. வித்துவான் ஸ்ரீ ரா. இராகவையங்காரவர்கள்

‡ 'ஒற்றொடு' என்று பாடங்கொள்வர்-ரா-ரா அவர்கள்

1269 சீரின்பகுதியும்பொதுவிலக்கணமும்

ஈரசை கொண்டு மூவசை * புணர்த்தும்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே. க௨

1270 ஈரசைச்சீருணர்த்தல்

இயலசை மயக்கம் இயற்சீ ரேனை
உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர். க௩

1271 மேலசைமயக்கத்துளாம்இருசீர்

முன்னிரை † உறினும் அன்ன வாகும். க௪

1272 இயற்சீர்உணர்த்தல்

நேரவண் நிற்பின் இயற்சீர்ப் பால. க௫

1273 ஒழிந்தநான்கியற்சீருணர்த்தல்

இயலசை ஈற்றுமுன் உரியசை வரினே
நிரையசை இயல வாகும் என்ப. க௬

1274 எய்தியதன்மேற்சிறப்புவிதி

அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே. க௭

1275 எய்தாததெய்துவித்தது

ஒற்றள பெடுப்பினும் அற்றென மொழிப. க௮

* 'புணர்த்தும்' என்பது உரையாசிரியராகிய இளம்பூரணர் பாடமெனக்காட்டுவர்; ராகவையங்கார் அவர்கள்.

† 'உறினும்' என்பது ரா. ரா. பாடம்

1276 வெண்பாவுரிச்சீருணர்த்தல்

இயற்சீர் இறுதிமுன் நேரவண் நிற்பின்
உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப. கக

1277 ஒழிந்தமூவகைச்சீருணர்த்தல்

வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீர் அல்லா மூவகை யான. உ0

1278 வஞ்சியுரிச்சீர்ப்பாவுரிமை

தன்பா அல்வழித் தானடை * யின்றே உக

1279 மற்றைச்சீர்மயங்குமாறு

வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய. உஉ

1280 கட்டளையாசிரியப்பாவில்அடியுறழாச்சீர்

வெண்பா உரிச்சீர் ஆசிரிய உரிச்சீர்
இன்பா நேரடிக் கொருங்குநிலை இலவே. உங

1281 கலிப்பாவிற்சீர்மயங்குமாறு

கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ. உச

1282 கட்டளையடிச்சீர்வரையறை

கலித்தளை அடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே. உரு

1283 வஞ்சியில்வாராஇயற்சீர்

வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா. உசு

---

* "வின்றே" என்பது ரா. ரா. பாடம்

1284 நான்கசையுஞ்சீராகுமிடம்

இசைநிலை நிறைய நிற்குவ தாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே. ௨௭

1285 எய்தியதொருமருங்குமறுத்தல்

இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான. ௨௮

1286 வெண்சீராற்கலித்தளையாமாறு

வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே. ௨௯

1287 கட்டளையடியல்லாதவழி, சீர்மயங்குமாறு

இன்சீர் இயைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய அடிக்கே. ௩0

1288 வஞ்சியுரிச்சீர்ஆசிரியஅடியுள்மயங்குமாறு

அந்நிலை மருங்கின் வஞ்சி உரிச்சீர்
ஒன்றுதல உடைய * ஓரோர் வழியே. ௩௧

1289 நாற்சீரடி

நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே. ௩௨

1290 இதுவுமது

அடி உள்ளனவே தளையொடு தொடையே. ௩௩

---

* 'ஓரொரு' என்பது ரா. ரா. பாடம்.

1291 கட்டளைப்பாட்டிற்குந்தொடைக்கு
மாகுங்கருவி

அடியிறந்து வருதல் இல்லென மொழிப. ௩௪

1292 பாட்டென்பதின் முதற்பொருள்
தோன்றுமாறு

அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே. ௩௫

1293 குறளடி

நாலெழுத் தாதி ஆக ஆறெழுத்
தேறிய நிலத்தே குறளடி என்ப. ௩௬

1294 சிந்தடி

ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே
ஈரெழுத் தேற்றம் ‡ அவ்வழி யான. ௩௭

1295 அளவடி

பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே. ௩௮

1296 நெடிலடி

மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப. ௩௯

1297 கழிநெடிலடி

மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
ஈரெழுத்து மிகுதலும் இவட்பெறும் என்ப. ௪௦

‡ அல்வழி என்பது ரா. ரா. பாடம்

1298 ஐவகையடிக்குச்சீரும்எழுத்தெண்ணணி

சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது. ௪௧

1299 வஞ்சிப்பாச்சீர்க்கெழுத்துக்கள்

நேர்நிலை வஞ்சிக் காறும் ஆகும். ௪௨

1300 சீரெல்லாவற்றிற்கும்பொதுவிதி

எழுத்தள வெஞ்சினும் சீர்நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப. ௪௩

1301 ஆய்தமெய் தற்றுகரமுமொருங்கெண்ணப்
படுதல் எய்தினவற்றைவிலக்கினவாறு

உயிரில் லெழுத்தும் எண்ணப் படாஅ
உயிர்த்திறம் இயக்கம் இன்மை யான. ௪௪

1302 வரையறுக்கப்பட்டசீரிரண்டது வஞ்சி

வஞ்சி அடியே இருசீர்த் தாகும். ௪௫

1303 வஞ்சியடிச்சீர்மூன்றெழுத்துச்சிறுமையது

தன்சீர் எழுத்தின் சின்மை மூன்றே. ௪௬

1304 ஒழிந்தவியணிலைவஞ்சிகூறல்

முச்சீ ரானும் வருமிடன் உடைத்தே. ௪௭

1305 இதுவுமதற்கெய்தியதோர்விதி

அசைகூன் ஆகும் அவ்வயி னான. ௪௮

1306 இஃதெய்தாதவெய்துவித்தது

சீர்கூடன் ஆதல் நேரடிக் குரித்தே. ௪௯

1307 ஐவகையடியின் விரிகூறல்

ஐவகை அடியும் விரிக்குங் காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்த
எழுபது * வகைமையின் வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே. ௫0

1308 ஒழிந்தஅடியுறழாமைக்குக்காரணங்கூறல்

ஆங்ஙனம் விரிப்பின் அளவிறந் தனவே
பாங்குற உணர்ந்தோர் பன்னுங் காலை. ௫௧

1309 எய்தாதவெய்துவித்தது

ஐவகை அடியும் ஆசிரியக் குரிய. ௫௨

1310 எய்தியதிகந்துபடாமைக்காக்கின்றது

விராஅய் வரினும் ஒரூஉநிலை இலவே. ௫௩

1311 எய்தாதவெய்துவித்தது

தன்சீர் வகையினும் தளைநிலை வகையினும்
இன்சீர் வகையின் ஐந்தடிக்கும் உரிய. ௫௪

1312 வெண்பாவிற்குச்சீர்தளைவகைகூறல்

தன்சீர் உள்வழித் தளைவகை வேண்டா. ௫௫

---

* 'வகையின்' என்பது ரா ரா. பாடம்

1313 கட்டளையடிக்கண் இயற்சீர் தட்குமாறு

சீரியை மருங்கின் ஓரசை ஒப்பின்
ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும். ௫௬

1314 வஞ்சியடியுறழுமாறுமதுபெறுநிலனும்

குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை இலவே வஞ்சிக் கென்ப. ௫௭

1315 வெண்பாவிற்குரியநிலம்

அளவும் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை ஒன்றாத் தன்மை யான. ௫௮

1316 கலிக்குரியநிலம்

அளவடி மிகுதி உளப்படத் தோன்றி
இருநெடில் அடியும் கலியிற் குரிய. ௫௯

1317 கலித்தளை விகற்பங் கூறல்

நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்பினும்
வரைநிலை யின்றே அவ்வடிக் கென்ப. ௬௦

1318 கலியடித்தளை வெண்பாவோடு விரவினுங் கடியப்படாதென்கிறது

விராஅய தளையும் ஒரூஉநிலை யின்றே. ௬௧

1319 வெண்சீரொன்றி வரும் அடி ஆசிரியத்திற்கு மயங்கியல்வகையால் நிற்கவும் பெறுமெனல்

இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே. ௬௨

1320 ஐஞ்சீரடியும் வருமாறு

வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப. ௬௩

1321 அறுசீரடியுங்கலிப்பாவிற்குரித்தென்

அறுசீர் அடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉம் நேரடி முன்னே. ௬௪

1322 எழுசீரான் வருமடிகூறுகின்றது

எழுசீர் அடியே முடுகியல் நடக்கும். ௬௫

1323 எய்தாததெய்துவித்தது

முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும். ௬௬

1324 எய்தியதிகந்துபடாமற்காத்தது

ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினும்
மூவகை அடியும் முன்னுதல் இலவே. ௬௭

1325 எய்தாததெய்துவித்தது

ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கிற்
றோற்றம் முச்சீர்த் தாகும் என்ப. ௬௮

1326 இதுவுமது

இடையும் வரையார் தொடையுணர் வோரே. ௬௯

1327 கலிப்பாவிற்குச்சிந்தடியுமுரித்தெனல்

முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும். ௭௦

1328 வஞ்சியீற்றடியாசிரியவடிபோலுமாறு

வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே. ௭௧

1329 வெண்பாவிற்கீறுணர்த்தல்

வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும். ௭௨

1330 மேலதற்கெய்தியதோர் விதி

* அசைச்சீர்த் தாகும் அவ்வயி னான. ௭௩

1331 இயற்சீர் இன்னுழி இன்னவாறு கொள்ளப்படுமெனல்

நேரீற் றியற்சீர் நிரையும் நிரைபும்
சீரேற் றிறூஉம் இயற்கைய என்ப. ௭௪

1332 ஒழிந்தஅசைச்சீர் நிரையீற்றுப்பின்னன்றி வாராவெனல

நிரையவண் நிற்பின் நேரும் நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர். ௭௫

1333 கலிப்பாவிற்கு அடிவகுக்கின்றது

எழுசீர் இறுதி ஆசிரியம் கலியே. ௭௬

1334 இதுவுமது

வெண்பா இயலினும் பண்புற முடியும். ௭௭

---

* 'அசைச்சீராகும்' என்பது ரா. ரா. பாடம்

1335 யாப்புணர்த்துகின்றது

எழுத்து முதலா ஈண்டிய அடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர். எஅ

1336 யாப்பிற்குமரபிற்கும்பகுதியுரிமை கூறியது

பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல்லோ டவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பெயர் எல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர். எகூ

1337 மரபினைவிளங்கக்கூறுவது

மரபே தானும்,
நாற்சொல் இயலான் யாப்புவழிப் பட்டன. அ௰

1338 அகவற்பாஆமாறு

அகவல் என்ப தாசிரி யம்மே. அக

1339 வெண்பாவாமாறு

‡ அஃதான் றென்ப வெண்பா யாப்பே. அஉ

1340 கலிப்பாவாமாறு

துள்ளல் ஓசை கலியென மொழிப. அ௩

‡ 'அதாஅன் றென்ப' என்பது ரா. ரா. பாடம்;
'அஃதன் றென்ப' என்பது உரையாசிரியர் பாடம்

1341 வஞ்சியாமாறு

தூங்கல் ஓசை வஞ்சி ஆகும். அ௪

1342 மருட்பாவிற்குவேறுபாடில்லையெனல்

மருட்பா ஏனை இருசார் அல்லது
தானிது என்னும் தனிநிலை இன்றே. அ௫

1343 மேலவற்றிற்கோர்வரையறை

* அவ்வியல் அல்லது பாட்டாங்குக் கிளவார். அ௬

1344 தூக்காமாறு

தூக்கியல் வகையே ஆங்கென மொழிப. அ௭

1345 தொடைவகைப்பெயர்முறைமுதலியன

மோனை எதுகை முரணே இயைபென
நானெறி மரபின தொடைவகை என்ப. அ௮

1346 எய்தியதன்மேற்சிறப்புவிதி

அளபெடை தலைப்பெய ஐந்தும் ஆகும். அ௯

1347 இதுவுமது

பொழிப்பும் ஒரூஉவும் செந்தொடை மரபும்
அமைத்தனர் தெரியின் அவையுமா ருளவே. ௯௰

* 'அவ்வியல்பல்லது' என்பது ஈா. ஈா. பாடம்

1348 நிரனிறைஇரட்டைத்தொடையு
மேற்றொடைப்பாற்படுமெனல்

நிரனிறுத் தமைத்தலும் இரட்டை யாப்பும்
மொழிந்தவற் றியலான் முற்றும் என்ப. ௬௧

1349 மோனைத்தொடை

அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை. ௬௨

1350 எதுகைத்தொடை

அஃதொழித் தொன்றின் எதுகை ஆகும். ௬௩

1351 மேற்றொடைப்பாற்படும்வேறுதொடைகள்

ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய. ௬௪

1352 முரண்டொடை

மொழியினும் பொருளினும் முரணுதல்
முரணே. ௬௫

1353 இயைபுத்தொடை

இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே. ௬௬

1354 அளபெடைத்தொடை

அளபெழின் அவையே அளபெடைத்
தொடையே. ௬௭

1355 பொழிப்பெதுகை

ஒருசீர் இடையிட் டெதுகை யாயிற்
பொழிப்பென ‡ மொழிப புலவர் ஆறே. ௬௮

‡ 'மொழிதல்' என்பது ஈர. பா. பாடம்

1356 ஒரூஉத்தொடை

இருசீர் இடையிடின் ஒரூஉவென மொழிப. ௯௯

1357 செந்தொடை

சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லியற் புலவரது செந்தொடை என்ப. ௧௦௦

1358 மேற்கூறியதொடையுள்ஒருசீரான்
வரையறையுடைமையின் அவற்றையடிக்கட்போலத்
தொகுத்தோதல்

மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை எழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே. ௧௦௧

1359 மேற்கூறியதொடைக்கானபுறனடை

தெரிந்தனர் விரிப்பின் வரம்பில பல்கும். ௧௦௨

1360 இதுவுமது

தொடைவகை நிலையே ஆங்கென மொழிப. ௧௦௩

1361 நோக்குணர்த்துகின்றது

மாத்திரை முதலா † அடிநிலை காறும்
நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே. ௧௦௪

---

† 'அடிநிறைந்' என்பது ஈ. ஈ. பாடம்

1362 பாவின்பெயர் வேறுபாடும் விரியும்

ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே. ௧௦௫

1363 பாவின்பொருட்குரிமைபொதுவகை யானுணர்த்தல்

அந்நிலை மருங்கின் அறமுதல் ஆகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப. ௧௦௬

1364 பாவின்தொகை

பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா என்றாங்
காயிரு பாவினுள் அடங்கும் என்ப. ௧௦௭

1365 இதுவுமது

ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப. ௧௦௮

1366 வாழ்த்துநான்குபாவிற்குமுரித்தெனல்

வாழ்த்தியல் * வகையே நாற்பாற்கும்
உரித்தே. ௧௦௯

1367 வாழ்த்துவேறுபாடுணர்த்தல்

வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து

* 'நாற்பாக்கும்' என்பது ரா. ரா. பாடம்.

பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ. ௧௧௦

1368 பாக்களைமூன்றாகவரையறுத்தல்

வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
செவியறி ‡ வுறூஉவென அவையும் அன்ன. ௧௧௧

1369 வாயுறைவாழ்த்துணர்த்தல்

வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே. ௧௧௨

1370 அவையடக்கியலுணர்த்தல்

அவையடக் கியலே அரிறபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே. ௧௧௩

1371 செவியுறையுணர்த்துகின்றது

செவியுறை தானே,
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
* நவிலுதல் கடனெனச் செவியுறுத்
தன்றே. ௧௧௪

‡ 'வுறூஉவென்றவையும்' என்பது நா. நா. பாடம்
* 'அவிதல்' என்பது நா. நா. பாடம்

1372 பாவிலக்கணங்கூறுமாறு

ஒத்தா ழிசையும் மண்டில யாப்பும்
குட்டமும் நேரடிக் கொட்டின என்ப ககரு

1373 குட்டத்திற்கோர்சிறப்புவிதி

குட்டம் எருத்தடி உடைத்தும் ஆகும். ககசு

1374 மண்டிலமுங்குட்டமும்வருமிடம்

மண்டிலக் குட்டம் என்றிவை இரண்டும்
செந்தூக் கியல என்மனார் புலவர். ககஎ

1375 வெண்பாஇன்னழிப்பாவாமெனவரையறுத்தல்

நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ
டொத்தவை எல்லாம் வெண்பா யாப்பின. ககஅ

1376 எய்தியதன்மேற்சிறப்புவிதி

கைக்கிளை தானே வெண்பா ஆகி
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே. ககக

1377 பரிபாடற்காவதோர்புறனடை

பரிபா டல்லே தொகைநிலை விரியின்
இதுபா என்னும் இயனெறி இன்றிப்
பொதுவாய் நிறற்கும் உரித்தென மொழிப. கஉ0

1378 பரிபாடலுறுப்பு
கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்குந் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும். கஉ௲

1379 இதுவுமது
சொற்சீர் அடியும் முடுகியல் அடியும்
அப்பா நிலைமைக் குரிய வாகும். கஉஉ

1380 சொற்சீரடியாமாறு
கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து
முட்டடி இன்றிக் குறைவுசீர்த் தாகியும்
ஒழியசை யாகியும் வழியசை புணர்ந்தும்
சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே. கஉ௩

1381 அங்கதச்செய்யுள்
அங்கதந் தானே அரில்தபத் தெரியின்
செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே. கஉ௪

1382 செம்பொருளங்கதம்
செம்பொருள் * ஆயின் வசையெனப் படுமே. கஉ௫

1383 பழிகரப்பங்கதம்
மொழிகரந்து ‡ சொல்லினது பழிகரப்
பாகும். கஉ௬

* 'ஆவன' என்பது ரா. ரா. பாடம்
‡ 'மொழியினது' என்பது ரா. ரா. பாடம்

1384 அங்கதச்செய்யுட்பகுதி

செய்யுட் டாமே இரண்டென மொழிப. கஉஎ

1385 அங்கதச்செய்யுட்பகுதியுளொன்று

தொகளொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயிற்
செவியுறைச் செய்யுள் அதுவென மொழிப. கஉஅ

1386 ஒழிந்த அங்கதச்செய்யுள்

வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர். கஉகூ

1387 கலிப்பாவுறுப்பின் விரி

ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே. கஙo

1388 ஒத்தாழிசைக்கலி

அவற்றுள்,
ஒத்தா ழிசைக்கலி இருவகைத் தாகும். கஙக

1389 நான்குறுப்புடன்வரும்ஒத்தாழிசை

இடைநிலைப் ‡ பாட்டுத் தரவுபோக் கடையென
நடைபயின் றொழுகும் ஒன்றென மொழிப. கஙஉ

1390 தாவினடியளவு

தரவே தானும் நாலடி இழிபாய்
ஆறிரண் டுயர் பேறவும் பெறுமே. கஙங

‡ 'பாட்டே' என்பது ர. ர. பாடம்

1391 தாவிற்குச்சுருங்கித்தாழிசைவரல்

இடைநிலைப் பாட்டே
தரவகப் பட்ட * மரபின என்ப. ௧௩௪

1392 ஆங்கெனுஞ்சொல்தனிச்சொல்லாதல்

அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகும் ஆங்கென் கிளவி. ௧௩௫

1393 சுரிதகம்

போக்கியல் வகையே வைப்பெனப் படுமே. ௧௩௬

1394 இதுவுமது

தரவியல் ஒத்தும் அதனகப் † படும்
புரைதீர் இறுதி நிலையுரைத் தன்றே. ௧௩௭

1395 ஒழிந்தஒத்தாழிசை

ஏனை ஒன்றே,
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே. ௧௩௮

1396 மேலதன்வகை

அதுவே,
வண்ணகம் ஒருபோ கெனவிரு வகைத்தே. ௧௩௯

* "மரபினதென்ப" என்பது ஈ. ஈ. பாடம்
† 'படுமே' என்பது ஈ. ஈ. பாடம்

1397 வண்ணக ஒத்தாழிசை

வண்ணகம் தானே,
தரவே தாழிசை எண்ணே வாரமென்
றந்நால் வகையிற் றோன்றும் என்ப. கச0

1398 ஒத்தாழிசையுள் ஏனையொன்றின் இலக்கணம்

தரவே தானும்,
நான்கும் ஆறும் எட்டும் என்ற
நேரடி பற்றிய நிலைமைத் தாகும். கசக

1399 ஒத்தாழிசையுணர்த்துகின்றது

ஒத்து மூன்றாகும் ஒத்தா ழிசையே. கசஉ

1400 இஃதுஐயமறுத்தது

தரவிற் சுருங்கித் தோன்றும் என்ப. கசந

1401 சுரிதக இலக்கணங்கூறல்

அடக்கியல் வாரம் தரவோ டொக்கும். கசச

1402 எண்ணுறுப்பளமாறு

முதற்றொடை பெருகிச் சுருங்குமன்
எண்ணே. கசரு

1403 மேலதற்கோர்புறனடை

எண்ணிடை ஒழிதல் ஏதம் இன்றே
சின்னம் * அல்லாக் காலை யான. கசசு

---

* 'இல்லா' என்பது ரா. ரா. பாடம்

1404 ஒருபோகின்வகை

ஒருபோ கியற்கையும் இருவகைத் தாகும். கசஎ

1405 மேலிரண்டின்பெயருமுறையும்

கொச்சக வொருபோ கம்போ தரங்கமென்
றொப்ப நாடி உணர்தல் வேண்டும். கசஅ

1406 கொச்சகவொருபோகுணர்த்திற்று

தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை இன்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடையது
கொச்சக வொருபோ காகும் என்ப. கசகூ

1407 கொச்சகவொருபோகிற்குஅளவு

ஒருபான் சிறுமை இரட்டியதன் உயர்பே. கரு0

1408 அம்போதரங்கவொருபோகினடிவரையறை

அம்போ தரங்கம் அறுபதிற் றடித்தே
செம்பால் வாரம் சிறுமைக் கெல்லை. கருக

1409 அம்போதரங்கஉறுப்பைந்து

எருத்தே கொச்சகம் அராகம் சிற்றெண்
அடக்கியல் வாரமோ டந்நிலைக் குரித்தே. கருஉ

1410 கலிவெண்பாவாமாறு

ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலாற்
றிரிபின்றி வருவது கலிவெண் பாட்டே. ௧௫௩

1411 விரவுறுப்புடைய வெண்கலியைக்கூறுவது

தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும். ௧௫௪

1412 அகநிலைக்கொச்சகக்கலி

பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே. ௧௫௫

1413 உறழ்கலியுணர்த்திற்று

கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்
போக்கின் றாகல் உறழ்கலிக் கியல்பே. ௧௫௬

1414 ஆசிரியப்பாவின் அடியளவு

ஆசிரியப் பாட்டின் அளவிற் கெல்லை
ஆயிரம் ஆகும் இழிபுமூன் றடியே. ௧௫௭

1415 வெண்பாவின் அடியளவு

நெடுவெண் பாட்டே முந்நால் அடித்தே
குறுவெண் பாட்டின் அளவெழு சீரே. ௧௫௮

1416 அங்கதப்பாட்டினளவு

அங்கதப் ¶ பாட்டவற் றளவோ டொக்கும். ௧௫௯

¶ 'பாட்டளவவற்றோ' என்பது ஈா., ரா. பாடம்

1417 எய்தாததெய்துவித்தது

கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
¶ செவியறி வாயுறை புறநிலை என்றிவை
தொகுநிலை அளவின் அடியில என்ப. ௧௫௦

1418 புறநிலைமுதலியவைமுடியுமாறு

புறநிலை வாயுறை செவியறி வுறாஉவெனத்
திறநிலை மூன்றும் திண்ணிதிற் றெரியின்
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின என்ப. ௧௫௧

1419 பரிபாட்டில்வரும்வெண்பாவளவு

* பரிபாட் டெல்லை
நாலீ ரைம்ப துயர்படி யாக
ஐயைந் தாகும் இழிபடிக் கெல்லை. ௧௫௨

1420 மேற்கூறியதளவை வரையறுத்தல்

அளவியல் வகையே அனைவகைப் படுமே. ௧௫௩

1421 எழுநிலத்துச்செய்யுட்களவாறெனல்

எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியின்
அடிவரை இல்லன ஆறென மொழிப. ௧௫௪

---

¶ 'புறநிலை வாயுறை செவியறி வென்றிவை' என்பது ரா. ரா. பாடம்.

* 'பரிபாடல்லே' 'உயர்வடி' 'இழிவடி' என்பன ரா. ரா. பாடம்.

1422 மேற்கூறிய ஆறற்றும்பெயருமுறையும்

அவைதாம்,
நூலி னான உரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான. ௧௬௫

1423 நூலினதுபொதுவிலக்கணம்

அவற்றுள்,
நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உண்ணின் றகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே. ௧௬௬

1424 நூலின்பகுதி

அதுவே தானும் ஈரிரு வகைத்தே. ௧௬௭

1425 நூற்பகுதியின்பெயரும்முறையும்

ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்
றாங்கனை மரபின் இயலும் என்ப. ௧௬௮

1426 சூத்திர இலக்கணம்

அவற்றுள்,
சூத்திரம் தானே,
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே ௧௬௯

1427 இயல் இலக்கணம்

நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்ப
தோத்தென மொழிப உயர்மொழிப் புலவர். ௧௭௦

1428 படல இலக்கணம்

ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அது படலம் ஆகும். ௧௭௧

1429 பிண்டங்கூறுகின்றது

மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற்
றோன்றுமொழிப் புலவரது பிண்டம் என்ப. ௧௭௨

1430 உரையாமாறுணர்த்திற்று

பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்
றுரைவகை நடையே நான்கென மொழிப. ௧௭௩

1431 அவற்றின் தொகைகூறுவது

அதுவே தானும் ‡ இருவகைத் தாகும். கஎச

1432 அவற்றதியல்புகூறுவது

ஒன்றே மற்றும் செவிலிக் குரித்தே
ஒன்றே யார்க்கும் வரைநிலை இன்றே. கஎரு

1433 பிசியினிருவகை

ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசிவகை நிலையே. கஎகூ

1434 முதுமொழியுணர்த்திற்று

நுண்மையுஞ் சுருக்கமு மொளி யுடைமையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப. கஎஎ

1435 மந்திரச்செய்யுளுணர்த்திற்று

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப. கஎஅ

1436 குறிப்புமொழி புணர்த்திற்று

எழுத்தொடும் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி என்ப. கஎகூ

‡ 'ஈரிருவகைத்தே' என்பது ந. ந. பாடம்

1437 பண்ணத்திகூறுகின்றது

பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே. கஅ௦

1438 இதுவுமது

அதுவே தானும் பிசியொடு மானும். கஅக

1439 இதுவுமது

அடிநிமிர் கிளவி ஈரா றாகும். கஅஉ

1440 இதுவுமது

அடியிகந்து வரினும் கடிவரை இன்றே. கஅ௩

1441 மேலவற்றுக்கெல்லாம்புறனடை

கிளரிய வகையிற் கிளந்தன தெரியின்
அளவியல் வகையே அனைவகைப் படுமே. கஅ௪

1442 திணைபுறப்புணர்த்துகின்றது

கைக்கிளை முதலா வேழுபெருந் திணையும்
முற்கிளந் தனவே முறைநெறி வகையின். கஅ௫

1443 களவென்னுங்கைகோளுணர்த்திற்று

காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலும் தோழியிற் புணர்வுமென்
றாங்கநால் வகையினும் அடைந்த சார்பொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே. கஅ௬

1444 கற்பெனுங்கைகோளுணர்த்திற்று

மறைவெளிப் படுதலும் தமரிற் பெறுதலும்
‡ இவைமுதல் ஆகிய இயனெறி திரியாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே. கஅஎ

1445 புறத்திணைக்கைகோளுணர்த்தல்

*மெய்பெறு வகைத்தே கைகோள் வகையே. கஅஅ

1446 கூற்றெனுமுறுப்புணர்த்தல்

பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியோ
டளவியல் மரபின் அறுவகை யோரும்
களவினிற் கிளவிக் குரியர் என்ப. கஅகூ

1447 இவ்வெண்ணப்பட்டஎல்லாருஞ்சொல்லிய
சொல்லாகச்செய்யுள்செயப்பெறுமாறு

பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர். ககூ0

‡ "இருமுதல்" என்பது பா. பா. பாடம்
* 'மெய்பெறவகைத்தே' என்பது பா. பா. பாடம்

1448 இவ்வறுவகையோரும் சொல்லிய
சொல்லாகச்செய்யுள்செய்யப்பெறார்

ஊரும் அயலுஞ் சேரி யோரும்
நோய்மருங் கறிநரும் தந்தையுந் தன்னையும்
கொண்டெடுத்து மொழியப் ¶ படுதல் அல்லது
கூற்றவண் இன்மை யாப்புறத் தோன்றும். ௧௬௧

1449 எய்தாததெய்துவித்தது

கிழவன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது. ௧௬௨

1450 இடைச்சுரத்துக்கண்டோர்மொழிதல்

ஒண்டொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப. ௧௬௩

1451 இதுவுங்கூற்றுவிகற்பங்கூறுவது

இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு
வழக்கியல் ஆணையிற் கிளத்தற்கும் உரியன். ௧௬௪

1452 இதுவுங்கண்டோர்கூற்று

ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
* மொழிந்தாங்கும் உரிய முன்னத்தின்
எடுத்தே. ௧௬௫

¶ 'படுவதல்லதைக்' என்பது ரா. ரா. பாடம்
* 'மொழிந்தாங்குரியர்' என்பது ரா. ரா. பாடம்

1453 கேட்போரென்னுமுறுப்புணர்த்தல்

மனையோள் கிளவியும் கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே. ககூசு

1454 இதுவுமது

பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே. ககூஎ

1455 ‡ இடமெனப்பட்டவுறுப்புணர்த்தல்

ஒருநெறிப் பட்டாங் கோரியல் முடியும்
கருமநிகழ்ச்சி இடமென மொழிப. ககூஅ

1456 பயனில்கூற்றுணர்த்திற்று

பரத்தை வாயில் எனவிரு * கூற்றும்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பயன்
இலவே. ககூகூ

1457 வாயில்கள்தம்முட்கூறவுமமையுமெனல்

வாயில் உசாவே ‡ தம்முளும் உரிய. உ00

1458 கேளாதனசிலபொருள்கேட்குநவும் ஆகற்கண்ணுமாராய்தல்

ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே

* 'வீற்றும்' 'பயமிலவே' என்பன ஏ. ஈ. பாடம்.
‡ 'தம்முளுரிய' என்பது ஏ. ஈ. பாடம்

புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவையல பிறவும் நுவலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங் கமையும் என்மனார் புலவர். உ0க

1459 காலமுணர்த்துகின்றது

இறப்பே நிகழ்வே எதிர தென்னும்
திறத்தியல் மருங்கிற் றெரிந்தனர் ‡ உள்ளப்
பொருணிகழ் வுரைப்பது காலம் ஆகும். உ0உ

1460 பயனென்னுமுறுப்புணர்த்தல்

இதுநனி பயக்கும் † இதனான் என்னும்
தொகைநிலைக் கிளவி பயனெனப் படுமே. உ0ங

1461 மெய்ப்பாட்டுறுப்புணர்த்தல்

உய்த்துணர் வின்றித் ¶ தலைவரும் பொருளான்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும். உ0ச

1462 எய்தியதிகந்துபடாமைக்காத்தது

எண்வகை இயனெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவின ததுவே. உ0ரு

‡ ‘உணரப்’ என்பது ஈ. ஈ. பாடம்

வம்’ என்பது ஈ. ஈ. பாடம்

¶ ‘தலைவரு’ என்பது ஈ. ஈ. பாடம்.

1463 எச்சங் கூறுகின்றது

சொல்லொடுங் குறிப்பொடும் முடிவுகொள்* இயற்
புல்லிய கிளவி எச்சம் ஆகும். ௨0௬

1464 முன்னமென்னு முறுப்புணர்த்தல்

இவ்விடத் திம்மொழி இவரிவர்க் † குரியரென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பதை முன்னம். ௨0௭

1465 பொருள்வகை கூறுவது

இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்குநெறி யின்றி
இதுவா கித்திணைக் குரிப்பொருள் ‡ எனாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப. ௨0௮

1466 துறையுறுப்புணர்த்தல்

அவ்வ மாக்களும் விலங்கும் அன்றிப்
பிறவவண் வரினும் திறவதி னாடித்
தத்தம் ¶ இயலின் மரபொடு முடியின்
அத்திறந் தானே துறையெனப் படுமே. ௨0௯

* 'இயற்கை' என்பது ரா. ரா. பாடம்
† 'குரியவென்' என்பது ரா. ரா. பாடம்
‡ 'என்னாது' என்பது ரா. ரா. பாடம்
¶ 'இயலான்' என்பது ரா. ரா. பாடம்.

1467 மாட்டுறுப்புணர்த்தல்

அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தனர் * உணர்த்தல்
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின். ௨௱௰

1468 மேற்கூறியவற்றிற்சிலவற்றிற்குப் புறனடை

மாட்டும் எச்சமும் ‡ நாட்டம் இன்றி
உடனிலை மொழியினும் தொடர்நிலை
பெறுமே. ௨௱௰௧

1469 வண்ணப்பகுதி

வண்ணம் தாமே நாலைந் தென்ப. ௨௱௰௨

1470 வண்ணங்களின் பெயர்வேறுபாடு

அவைதாம்,
பாஅ வண்ணம் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்
அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்

* "உரைத்தல்" என்பது ரா. ரா. பாடம்

‡ 'நாட்டல்' என்பது ரா. ரா. பாடம்

எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்
தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணமென்
றாங்கனம் அறிப அறிந்திசி னோரே. ௨௧௬

1471 பாஅவண்ணம்

அவற்றுள்,
பாஅ வண்ணம்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும். ௨௧௭

1472 தாஅவண்ணம்

தாஅ வண்ணம்,
இடையிட்டு வந்த எதுகைத் தாகும். ௨௧௮

1473 வல்லிசைவண்ணம்

வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப்
பயிலும். ௨௧௯

1474 மெல்லிசைவண்ணம்

மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து
மிகுமே. ௨௨௦

1475 இயைபுவண்ணம்

இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே. ௨௨௧

1476 அளபெடைவண்ணம்

அளபெடை வண்ணம் அளபெடை பயிலும். ௨௨௨

1477 நெடுஞ்சீர்வண்ணம்

நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத் தாப்
பயிலும். ௨௨௦

1478 குறுஞ்சீர்வண்ணம்

குறுஞ்சீர்வண்ணம் குற்றெழுத் தாப்பயிலும். ௨௨௧

1479 சித்திரவண்ணம்

சித்திர வண்ணம்,
நெடியவும் குறியவும் நேர்ந்துடன்* வருமே. ௨௨௨

1480 நலிபுவண்ணம்

நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும். ௨௨௩

1481 அகப்பாட்டுவண்ணம்

அகப்பாட்டு வண்ணம்,
முடியாத் தன்மையின் ‡முடித்தன மேற்றே. ௨௨௪

1482 புறப்பாட்டுவண்ணம்

புறப்பாட்டு வண்ணம்,
முடிந்தது போன்று முடியா தாகும். ௨௨௫

1483 ஒழுகுவண்ணம்

ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும். ௨௨௬

---

* 'வருஉம்' என்பது ஈச. ஈச. பாடம்

‡ 'முடிந்ததன் மேற்றே' என்பது ஈச. ஈச. பாடம்

1484 ஒரூஉவண்ணம்

ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும். ௨௨௭

1485 எண்ணுவண்ணம்

எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும். ௨௨௮

1486 அகைப்புவண்ணம்

அகைப்பு வண்ணம் அறுத்தறுத்
தொழுகும். ௨௨௯

1487 தூங்கல்வண்ணம்

தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும். ௨௩௦

1488 ஏந்தல்வண்ணம்

ஏந்தல் வண்ணம்,
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும். ௨௩௧

1489 உருட்டுவண்ணம்

உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும். ௨௩௨

1490 முடுகுவண்ணம்

முடுகு வண்ணம்,
அடியிறந் தோடி அதனோ ரற்றே. ௨௩௩

1491 புறனடை

வண்ணந் தாமே இவையென மொழிப. ௨௩௪

1492 வனப்பியல்

*வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் றாய பனுவலோ
டம்மை தானே அடிநிமிர் பின்றே. உ௫௫

1493 அழகுணர்த்திற்று

செய்யுள் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே. உ௫௬

1494 தொன்மையுணர்த்திற்று

தொன்மை தானே,
உரையொடு புணர்ந்த பழமை மேற்றே. உ௫௭

1495 தோலுணர்த்திற்று

இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியான் அடிநிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிப தொன்மொழிப்புலவர். உ௫௮

1496 விருந்துணர்த்திற்று

விருந்தே தானும்,
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே. உ௫௯

* இச்சூத்திரமுதலடி நச்சினார்க்கினியர் உரையில் எடுத்தாளப்படவில்லையென்பதும், ''பனுவலின்'' ''தாமே'' என்பனவும் ஈ. ஈ. பாடம்

1497 இயைபுணர்த்திற்று

ஞகாரை முதலா னகாரை யீற்றுப்
புள்ளி இறுதி இயைபெனப் படுமே. உ௪0

1498 புலனாமாறுணர்த்திற்று

¶ சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே. உ௪௧

1499 இழைபிலக்கணம்

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்
தோங்கிய மொழியான் ஆங்கவண் ஒழுகின்
இழைபின் இலக்கணம் இயைந்த தாகும். உ௪உ

1500 இவ்வியற்குப் புறனடை

செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி
இழைத்த இலக்கணம் பிழைத்தன போல
வருவவுள * வெனினும் வந்தவற் றியலாற்
றிரிபின்றி முடித்தல் தெள்ளியோர் கடனே. உ௪௩

செய்யுளியல் முற்றிற்று.

¶ 'தெரிந்தமொழியான்' என்பதும் ரா. ரா. பாடம்
* 'வேனும்' என்பது ரா. ரா. பாடம்.

ஒன்பதாவது

## மரபியல்.

1501 இளமைக்குணம்பற்றிவழங்குஞ்சொற்கள்

மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்
பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்
றொன்பதும் குழவியோ டிளமைப் பெயரே. க

1502 ஆண்பாற்பெயர்கள்

ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப. உ

1503 பெண்மைப்பெயர்கள்

பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணாவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே. ங

1504 புள்ளிளமைப்பெயர்கள்

அவற்றுள்,
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை. ச

1505 தவழ்பவற்றின்பெயர்கள்

தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன. ௫

1506 குட்டிக்குரியபெயர்

மூங்கா வெருகெலி மூவரி அணிலொ
டாங்கவை நான்கும் குட்டிக் குரிய. ௬

1507 பறழெனும்பெயர்வழக்கு

பறழெனப் படினும் உறழாண் டில்லை. ௭

1508 குருளையாமாறு

நாயே பன்றி புலிமுயல் நான்கும்
ஆயுங் காலைக் குருளை என்ப. ௮

1509 இதுவுமது

நரியும் அற்றே நாடினர் கொளினே. ௯

1510 மேற்கூறியஒன்பதினையுங்குட்டிபறழெனக் கூறல்

குட்டியும் பறழும் கூற்றவண் வரையார். ௧0

1511 பன்றிமுதலியநான்கிற்கும்பிள்ளைப் பெயருமுரித்தெனல்

பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை
கொள்ளுங் காலை நாயலங் கடையே. ௧௧

1512 மறியெனப்படுமாறு

யாடுங் குதிரையும் நவ்வியும் உழையும்
ஓடும் புல்வாய் உளப்பட மறியே. ௧௨

1513 குரங்கினிளமைகுட்டியெனல்

கோடுவாழ் குரங்குங் குட்டி கூறுப. ௧௩

1514 குரங்கின்பகுதிக்குரியவேறுபெயர்கள்

மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்
அவையும் அன்ன அப்பா லான. ௧௪

1515 கன்றெனும்பெயர்க்குரியவை

யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்
ஆமோ டைந்தும் கன்றெனற் குரிய. ௧௫

1516 இதுவுமது

எருமையும் மரையும் வரையார் ஆண்டே. ௧௬

1517 மேலவற்றோடொட்டெடுத்தது

கவரியும் கராமும் நிகரவற் றுள்ளே. ௧௭

1518 கன்றெனும்பெயரொட்டகத்திற்குமாமெனல்

ஒட்டகம் அவற்றோ டொருவழி நிலையும். ௧௮

1519 குழவிப்பெயர்க்குரியது

குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை. ௧௯

1520 இதுவுமது

ஆவும் எருமையும் அவைசொலப் படுமே. ௨௦

1521 இதுவுமது

கடமையும் மரையும் முதனிலை யொன்றும். உக

1522 இதுவுமது

குரங்கும் முசுவும் ஊகமும் மூன்றும்
நிரம்ப நாடின் அப்பெயர்க் குரிய. உஉ

1523 மக்களிளமைப்பெயர்

குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை
கிழவ அல்ல மக்கட் கண்ணே. உ௩

1524 ஓரறிவுயிரின் இளமைப்பெயர்

பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே. உ௪

1525 எய்தியது விலக்குகின்றது

நெல்லும் புல்லும் நேரார் ஆண்டே. உ௫

1526 புறனடை

சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையல திலவே. உ௬

1527 ஓரறிவுயிர்முதலியவையுணர்த்துமாறு

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே

நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே. உஎ

1528 ஓரறிவுடையன இவையெனல்

புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. உஅ

1529 ஈரறிவுடையன இவையெனல்

நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே உகூ

1530 மூவறிவுடையன இவையெனல்

சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩0

1531 நாலறிவுடையன இவையெனல்

நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩க

1532 ஐயறிவுடையன இவையெனல்

மாவும் மாக்களும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩உ

1533 ஆறறிவுயிரிவையெனல்

மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩௩

1534 களிறெனும்பெயர்க்குரியவை

வேழக் குரித்தே விதந்து களிறென்றல்
கேழற் கண்ணும் கடிவரை யின்றே. ௩௪

1535 ஒருத்தலென்னும்பெயர்க்குரியவை

புல்வாய் புலியுழை மரையே கவரி
சொல்லிய கராமொ டொருத்தல் ஒன்றும். ௩௫

1536 இதுவுமது

வார்கோட் டியானையும் பன்றியும் அன்ன. ௩௬

1537 இதுவுமது

ஏற்புடைத் தென்ப எருமைக் கண்ணும். ௩௭

1538 ஏறெனும்பெயர்க்குரியவை

பன்றி புல்வாய் உழையே கவரி
என்றிவை நான்கும் ஏறெனற் குரிய. ௩௮

1539 இதுவுமது

எருமையும் மரையும் பெற்றமும் அன்ன. ௩௯

1540 இதுவுமது

கடல்வாழ் சுறவும் ஏறெனப் படுமே. ௪௦

1541 போத்தெனும்பெயர்க்குரியவை

பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
மற்றிவை எல்லாம் போத்தெனப் படுமே. ௪௧

1542 இதுவுமது

நீர்வாழ் சாதியுள் அறுபிறப் புரிய. சஉ

1543 இதுவுமது

மயிலும் எழாலும் பயிலத் தோன்றும். சங

1544 புல்வாய்க்குரியபெயர்

இரலையும் கலையும் புல்வாய்க் குரிய. சச

1545 உழைக்குரியபெயர்

கலையென் காட்சி உழைக்கும் உரித்தே. சரு

1546 மூசுவுக்குரியபெயர்

நிலையிற் றப்பெயர் மூசுவின் கண்ணும். சசா

1547 யாட்டிற்குரியபெயர்கள்

மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
யாத்த என்ப யாட்டின் கண்ணே. சஎ

1548 மயிலொழிந்தபறவைகளின் ஆண்பாற்
பெயர் சேவலெனல்

சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்
மாயிருந் தூவி மயிலலங் கடையே. சஅ

1549 எற்றையென்னுஞ்சொல்லுரிமை

ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்
எற்றைக் கிளவி உரித்தென மொழிப. சகூ

1550 புறனடை

ஆண்பால் எல்லாம் ஆணெனற் குரிய
பெண்பால் எல்லாம் பெண்ணெனற் குரிய
காண்ப அவையவை அப்பா லான. ௫௦

1551 பிடியெனும்பெயர்க்குரியது

பிடியென் பெண்பெயர் யானை மேற்றே. ௫௧

1552 பெட்டையெனும்பெயர்க்குரியவை

ஒட்டகம் குதிரை கழுதை மரையிவை
பெட்டை என்னும் பெயர்க்கொடைக் குரிய. ௫௨

1553 இதுவுமது

புள்ளும் உரிய அப்பெயர்க் கென்ப. ௫௩

1554 புள்ளிற்குரியபெண்மைப்பெயர்

பேடையும் பெடையும் நாடின் ஒன்றும். ௫௪

1555 அளகெனும்பெயர்க்குரியவை

கோழி கூகை ஆயிரண் டல்லவை
சூழுங் காலை அளகெனல் அமையா. ௫௫

1556 இதுவுமது

அப்பெயர்க் கிழமை மயிற்கும் உரித்தே. ௫௬

1557 பிணையெனற்குரியவை

புல்வாய் நவ்வி உழையே கவரி
சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே. ௫௭

1558 பிணவென்றற்குரியவை

பன்றி புல்வாய் நாயென மூன்றும்
ஒன்றிய என்ப பிணவின் பெயர்க்கொடை. ருஅ

1559 பிணவலென்றற்குரியவை

பிணவல் எனினும் அவற்றின் மேற்றே. ருகூ

1560 ஆவென்பதுஇன்னுழியாகாதெனல்

பெற்றமும் எருமையும் மரையும் ஆவே. கூ0

1561 உயர்திணைப்பெண்மைக்குரியவை

பெண்ணும் பிணாவும் மக்கட் குரிய. கூக

1562 நாகெனும்பெயர்க்குரியவை

எருமையும் மரையும் பெற்றமும் நாகே. கூஉ

1563 இதுவுமது

நீர்வாழ் சாதியுள் நந்து நாகே. கூங

1564 யாட்டிற்கேயுரியபெண்மைப்பெயர்

மூடும் கடமையும் யாடல பெறா. கூச

1565 பாட்டியென்றுசொல்லப்படுவன

பாட்டி என்பது பன்றியும் நாயும். கூரு

1566 இதுவுமது

நரியும் அற்றே நாடினர் கொளினே. கூகூ

1567 மந்தியெனும்பெயர்க்குரியவை

குரங்கும் முசுவும் ஊகமும் மந்தி. கூஎ

1568 மரீஇவந்துமுடிந்தமரபுணர்த்திற்று

குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிளியைத் தத்தை என்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்
இருணிறப் பன்றியை ஏனம் என்றலும்
எருமையுள் ஆணினைக் கண்டி என்றலும்
முடிய வந்த அவ்வழக் குண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே. ௬௮

1569 திரியினுங்கடியலாகாதெனல்

பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே. ௬௯

1570 அந்தணர்க்குரியமரபு

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய. ௭௰

1571 அரசர்க்குரியன

படையும் கொடியும் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறுந் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய. ௭௧

1572 மேலதற்கோர் புறனடை

அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்
கொன்றிய வருஉம் பொருளுமா ருளவே. ௭௨

1573 இஃதையமறுத்தது

பரிசில்பா டாண்டிணைத் துறைக்கிழ மைப்பெயர்
நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித்
தன்றே. ௭௩

1574 ஒழிந்தசாதியோர்க்குமொப்பன
உடன்கூறல்

ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
யாரும் சார்த்தி அவையவை பெறுமே. ௭௪

1575 இதுவுமது

தலைமைக் குணச்சொல்லும் தத்தமக் குரிய
நிலைமைக் கேற்ப நிகழ்த்துப என்ப. ௭௫

1576 இடைப்பட்ட இருவருணத்தார்க்கும்
ஆவதோர் புறனடை

இடையிரு வகையோர் அல்லது நாடிற்
படைவகை பெறாஅர் என்மனார் புலவர். ௭௬

1577 வணிகர்மரபு

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை. ௭௭

1578 வணிகர்க்கேயுரியதொழில்

மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான. எஅ

1579 இதுவுமது

கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே. எகூ

1580 வேளாண்மாந்தர்க்குரியதொழில்

வேளாண் மாந்தர்க் குழுதூண் அல்ல
தில்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி. அ0

1581 வேளாண்மாந்தர்க்கோர்புறனடை

வேந்துவிடு தொழிலிற் படையும் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே. அக

1582 அரசர்க்குரியதொழில்அந்தணர்க்குரியவாதல்

அந்த ணாளர்க் கரசு வரைவின்றே. அஉ

1583 குறுநிலமன்னர்க்குரியன

வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
தாரும் ஆரமும் தேரும் வாளும்
மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய. அங

1584 எய்தியதிகந்துபடாமைக்காத்தது

அன்ன ராயினும் இழிந்தோர்க் கில்லை. அச

1585 ஓரறிவுயிர்க்கின்னவாறுசொல்லுதல்
மரபென்பது

புறக்கா ழனவே புல்லென மொழிப
அகக்கா ழனவே மரமென மொழிப. அரு

1586 புறக்காழனவற்றைச்சொல்மரபுணர்த்திற்று

தோடே மடலே ஓலை என்றா
ஏடே இதழே பாளை என்றா
ஈர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர். அசு

1587 அகக்காழனவற்றைச்சொல்
மரபுணர்த்திற்று

இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனையுள் ளுறுத்த அனையவை எல்லாம்
மரனொடு வரூஉம் கிளவி என்ப. அஎ

1588 மேலிரண்டற்கும்பொதுவுறப்புணர்த்திற்று

காயே பழமே தோலே செதிளே
வீழோ டென்றாங் கவையும் அன்ன. அஅ

1589 உலகியல்மரபிற்றிரியாமையும்
அதன்காரணமும்

நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்

ஐம்பால் இயனெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும். ௮௯

1590 இதுமரபினையே வற்புறீஇயது
மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை
மரபுவழிப் பட்ட சொல்லி னான. ௯0

1591 வழக்கிற் றஞ்செய்யுட்கும்வருமிலக்
கணத்திற்கும் பொது
மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும். ௯௧

1592 மரபினைப்பிழைத்துக்கூறுவன வுமுள
வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாக லான. ௯௨

1593 நூலினிருவகை
மரபுநிலை திரியா மாட்சிய வாகி
உரைபடு நூறாம் இருவகை இயல
முதலும் வழியுமென நுதலிய நெறியின. ௯௩

1594 முதனூலிலக்கணம்
வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும். ௯௪

1595 வழிநூலாமாறு
வழியெனப் படுவ ததன்வழித் தாகும். ௯௫

1596 வழிநூல்இனைத்துவகைத்தெனல்

வழியின் நெறியே நால்வகைத் தாகும். ௯௬

1597 நால்வகைவழிநூலும்பெறுமாறு

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலொ டனைமர பினவே. ௯௭

1598 எல்லாநூற்கும்ஆவதோரிலக்கணம்

ஒத்த சூத்திரம் உரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர். ௯௮

1599 இஃதும்அஃதும்அறுத்தல்நுதலிற்று

உரையெடுத் ததன்முன் யாப்பினும் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விடுத்தலும் விலக்கலும் உடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் படுமே. ௯௯

1600 சூத்திரம்ஆமாறுணர்த்திற்று

மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு
சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத் தாகித்

துளக்கல் ஆகாத் துணைமை எய்தி
அளக்கல் ஆகா அரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்தெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர். க௦௦

1601 காண்டிகையாமாறு

பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பிற்
கரப்பின்றி முடிவது காண்டிகை ஆகும். க௦க

1602 மேலதற்கோர்புறனடை

விட்டகல் வின்றி விரிவொடு பொருந்திச்
சுட்டிய சூத்திரம் முடித்தற் பொருட்டா
ஏது நடையினும் எடுத்துக் காட்டினும்
மேவாங் கமைந்த மெய்ந்நெறித் ததுவே. க௦உ

1603 காண்டிகையினைமெய்ப்படக்கிளந்த
வகை யுணர்த்திற்று

சூத்திரத் துட்பொருள் அன்றியும் யாப்புற
இன்றி யமையா தியைபவை எல்லாம்
ஒன்ற உரைப்ப துரையெனப் படுமே. க௦௩

1604 எய்தியதன்மேற்சிறப்புவிதி

மறுதலைக் கடாஅ மாற்றமும் உடைத்தாய்த்
தன்னூ லானும் முடிந்த நூலானும்
ஐயமும் மருட்கையும் செவ்விதின் நீக்கித்

தெற்றென ஒருபொருள் ஒற்றுமை கொளீஇத்
துணிவொடு நிற்றல் என்மனார் புலவர். ௧௦௪

1605 வழிநூற்கேயாவதோர்வேறுபாடு

சொல்லப் பட்டன வெல்லா மாண்பும்
மறுதலை யாயினும் மற்றது சிதைவே. ௧௦௫

1606 முதனூற்கேயாவதோர்வேறுபாடு

சிதைவில என்ப முதல்வன் கண்ணே. ௧௦௬

1607 மறுதலைப்படுதல்வழிநூற்குக்குற்றமெனல்

முதல்வழி யாயினும் யாப்பினுட் சிதையும்
வல்லோன் புணரா வாரம் போன்றே. ௧௦௭

1608 பத்துவகைக்குற்றமிவையெனல்

சிதைவெனப் படுபவை வசையற நாடிற்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதல் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியான் இழுக்கம் கூறல்
தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோள் இன்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி யாகும். ௧௦௮

1609 பத்துவகைக் குணமும் உளவெனல்

எதிர்மறுத் துணரின் றிறத்தவும் அவையே. ௧௦௯

1610 முப்பத்திருவகையுத்தியும்

இந்நூலுள் அதிகாரம் மூன்றற்கும் வேண்டும்

புறனடையுங் கூறுவது

ஒத்த காட்சி உத்திவகை விரிப்பின்
நுதலிய தறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்துமெய்ந் நிறுத்தல்
மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்
வாரா ததனான் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வாராத துணர்த்தல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
ஒப்பக் கூறல் ஒருதலை மொழியே
தன்கோட் கூறல் முறைபிற ழாமை
பிறனுடம் பட்டது தானுடம் படுதல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழிவாம் என்றல் கூறிற் றென்றல்
தான்குறி யிடுதல் ஒருதலை யன்மை
முடிந்தது காட்டல் ஆணை கூறல்
பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்

மறுதலை சிதைத்துத் தன்றுணி புரைத்தல்
பிறன்கோட் கூறல் அறியா துடம்படல்
பொருளிடை யிடுதல் எதிர்பொருள் உணர்த்தல்
சொல்லின் எச்சம் சொல்லியாங் குணர்த்தல்
தந்துபுணர்ந் துரைத்தல் ஞாபகம் கூறல்
உய்த்துக்கொண் டுணர்த்தலொடு மெய்ப்பட நாடிச்
சொல்லிய அல்ல பிறவவண் வரினும்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தின் எண்ணி மாசறத் தெரிந்துகொண்
டினத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே. கக0

மரபியல் முற்றிற்று.



பொருளதிகாரச்சூத்திரங்கள் 665

தொல்காப்பியச்சூத்திரங்கள் 1610.

முற்றும்.



மீனாக்ஷி விலாஸ் பிரஸ், மதுரை—1922.

உ

# இலக்குமிராம்கோவை

## மாணவப்பிரசுரயணிகள்

துறைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டவை

சென்னைப்பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்த்தலைமைப் புலமை நடத்திய மகாமகோபாத்தியாயர் ஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதியது:— "மதுரை ஸௌராஷ்டிர உயர்தரக்கலாசாலை முதல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ பு. சி. புன்னைவனநாதமுதலியாரவர்கள் இயற்றியுள்ள 'நீதிசாரத் திரட்டு' 'அற்புதக்கணையாழி', "யாக்ஞவல்கியம்" "கங்காபாய் சுயம்வரம்" என்னும் வசனநூல்களின் சிற்சிலபகுதிகளையும், தொகுத்து வெளியிட்டுள்ள செய்யுட்பாடகோவைகளையும் படித்துப்பார்த்தேன். வசனநூல்களெல்லாம் நல்லநீதிகளைத் தெரிவிப்பதன்றி நல்லநடையில் திருந்தமாகவும் எழுதப்பெற்றுள்ளன. செய்யுட்பாடங்கள் பலவகையான சிறந்த பிரபந்தங்களிலிருந்தும் வேறுவகையான இலக்கிய நூல்களிலிருந்தும் செவ்வனே ஆராய்ந்து தொகுக்கப்பெற்றுள்ளன. மதக்கல்வியும் நீதிபோதனையும் மிகவும் இன்றியமையாதன வென்று பெரியோர்கள் கூறும் இக்காலத்தில் மாணாக்கர்கள் இப்புஸ்தகங்களை வாங்கிப்படிப்பார்களாயின் மிக்க பயனையடைவார்களென்பது திண்ணம். ஆதலின் பாடப்புத்தகங்களை ஏற்படுத்தும் அதிகாரிகள் முதலியாரவர்களை ஆதரித்து ஊக்கமளிப்பார்களென்று நம்புகிறேன்.

திருவாவடுதுறை } 25—11—1921. }

இங்ஙனம்
வே. சாமிநாதையன்

மதுரைத்தமிழ்ச்சங்கச் செந்தமிழ்ப்பத்திராசிரியர்
ஸ்ரீ திரு. நாராயணையங்காரவர்கள் எழுதிய மதிப்புரை.

செய்யுட்பாடக்கோவை இரண்டாம்பாகம்:— 'இது தனித்தமிழ் பயிலத்தொடங்குவார்கட்கும், ஆங்கில கலாசாலை மாணவர்க்கும்பயன்படத்தக்கது. பெயரளவில் அங்கொன்றுமிங்கொன்றுமாகக் காணப்பட்ட பலநூல்களின் பெயரும் நூலாசிரியர் திறமும் ஒருங்கே கண்டுகளித்தற்கு இந்நூல்கருவியாகும். இதன் விலை ரூ. 1—4—0.

பள்ளிக்கூட உதவிவிசாரணைக்கர்த்தர் காலஞ்சென்ற ஸ்ரீ திரு. கள்ளப்பிரான்பிள்ளையவர்கள் பி.ஏ எழுதியது. "முதலியாரவர்கள் செய்யுட்பாடக்கோவையை இரண்டு பிரிவாக அச்சிட்டு வெளிப்படுத்தியிருக்கிறார்கள். முதற் பிரிவு நடுத்தரப்பள்ளியிற் கல்விபயில்வார்க்கும், இரண்டாவது பிரிவு உயர்தரப்பள்ளிகளிற் கற்பார்க்கும், பல்கலைக் கழகத்தார் ஏற்படுத்தியிருக்கும் புலமைப்பட்டம் பெற முயல்வோர்க்கும், பயன்படுமாறு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. செய்யுட்கள் சமயவேற்றுமைபாராட்டாது சைவம் வைணவம் மகமதியர் முதலிய பலகொள்கை நூல்களினின்றும் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றன"

ரிட்டயர்டு வெற்றரெரி டிப்டி ஆப்ரெண்டு திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் ஜி. பி. வி. வி. முகவுரையில் எழுதியது:—

"இவ்விரண்டாம்பாகம் நூற்றுக்கதிகமான நூல்களினின்று தெள்ளிதின் ஆராய்ந்தமைவுடையவாகப்பொறுக்கிக்கோவையாக்கிய தொள்ளாயிரம் செய்யுட்களையுடையது. இதனில் வள்ளுவர் கம்பர் சிவஞானமுனிவர் முதலிய பலபிரபல கவிசிரேஷ்டர்களுடைய சிறந்த பாடல்கள் பல அடங்கியுள்ளன. பாட்டுக்களைக்கூடிய அளவு சந்திபிரித்தும் குறிப்புரை சேர்த்தும் பதிப்பித்திருப்பது கற்பார்க்கு உபயோகமானது.

P. N. சிதம்பரமுதலியார் அண் கோ.,
புத்தகவியாபாரிகள், மதறாஸ்.